## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Palantamilil amaippiyal marrum kuriyiyal āyvukaḷ |
| Author | : | Thamizhavan (Dr. S. Carlos) Professor (Retd.) Bangalore University, Bangalore |
| General Editor | : | Prof. Dr. K.A. Gunasekaran Director International Institute of Tamil Studies Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies II Main Road, C.I.T. Campus, Chennai-600 113 Ph: 22542992 |
| Publication No. | : | 627 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2009 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | viii + 136 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 45/- (Rupees Forty five Only) |
| Printed by | : | United Bind Graphics 189-D, Royapettah High Road Mylapore, Chennai - 600 004. |
| Subject | : | Structuralistic and Semiotic Studies in ancient Tamil Literature & Grammar |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

1980களில் 'ஸ்ட்ரக்சுரலிசம்' எனும் அமைப்பியல் குறித்து மேலைநாட்டாரின் கோட்பாட்டினைத் தமிழுக்கு அறிமுகமாக்கியவர்களுள் முதன்மையானவர் தமிழவன். அவர் எழுதியுள்ள இந்த நூல் பழந்தமிழ் இலக்கணம், உரை, மற்றும் பழைய இலக்கியத்தை மேற்கத்திய மொழியியல், அமைப்பியல், குறியியல் நோக்கில் அணுகிக் கண்டுள்ள புதிய கருத்துக்கள் கொண்ட கட்டுரைகள் அடங்கியவை ஆகும். இலக்கியத்தின் அடிப்படைகளில் மொழியியலின் அடிப்படைகள் உறவு கொண்டிருப்பது குறித்து இந்நூலில் பல்வேறு எடுத்துக் காட்டுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

தொல்காப்பியம் பெயரியலில் சொன்மை, பொருண்மை பற்றிப் பேசும்போது பொருண்மை இருவகைப்படும் என்று கூறி ஒன்று, 'தெரிபுவேறு நிலையல்' என்றும் இன்னொன்று 'குறிப்பில் தோன்றல்' என்றும் கூறுகிறது. குறிப்பில் தோன்றல் பற்றிக் கூறும் போது அதனை நன்னூல் எட்டுவகையாகப் பிரிக்கிறது என எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது நூலாசிரியரின் ஆழ்ந்த புலமையினை எடுத்துக்காட்டுகிறது.

சொல்லாடல்கள் குறிகளால் (Sign) உருவானவை எனினும் குறிகளால் விஷயங்களைக் குறிப்பதைவிட அதிகம் பணி சொல்லாடல்களுக்கு உண்டு எனச் சொல்லாடல் குறித்த கட்டுரையில் கூறி விளக்குவது இலக்கியவாதிகளுக்கும் மொழியியலார்க்கும் கூடுதலாகச் சிந்திக்க முன்வைத்துள்ள ஆய்வுக்குரிய கருத்தாகும்.

நச்சினார்க்கினியரின் குறியியல் என்பதில் உரை என்பது ஒரு கலாச்சாரத்தை இன்னொரு கலாச்சாரத்தோடு இணைக்கும் கலாச்சார மாயமாதல் (Enculturalism) என்ற மானுடவியல் செயல்பாட்டால் உருவானதைத்தான் என நூலாசிரியர் விளக்கிச் சென்று பேச்சுமொழி குறித்தும், நெடுநெல்வாடை, திருமுருகாற்றுப்படை போன்ற இலக்கியங்களை ரோலான் பார்த்தேஷ், உளவியல் நிபுணர் ஃபிராய்ட் போன்றோரைத் துணை கொண்டும் விளக்கியுள்ளார். மேலும் குறியீடு செய்யுள் வழக்கு (புனைவு) அர்த்தம் உலகவழக்கு அதாவது எதார்த்தம், நடைமுறை

எனுமாறு கூறி உலகவழக்கு என்பது உள்ளுணர்வு, அதாவது உளவியல், இதனை அனுபவத்தின் அடிப்படை என்கிறது என நுட்பமாகக் குறியீடு குறித்து விளக்குகிறார்.

பியர்ஸ், மில்டன், சிங்கர், டேவிட் சில்வர்மன், ரோமன் யாக்கப்சென் போன்ற பலரின் எடுத்துக்காட்டுகளை நமது தமிழ்ச் செய்யுள் மற்றும் மொழியாடல்களை முன்வைத்து விளக்குகிறார். பேச்சுக்கும் எழுத்துக்கும் உள்ள வேறுபாடு, சொல்லாடல்கள், பிரதிகளின் உரைகள், செய்யுள்கள் எனப்பல நிலைகளில் சான்றுகள் காட்டிக் குறி, குறியீடு, இடுகுறிச் சிந்தனை என மொழியியல் இலக்கியம் வழி உரத்த சிந்தனை செய்திடவும், பன்னாட்டு மொழிச் சிந்தனையாளர்களுடன் ஒப்பீடு செய்து அறிந்து ஆய்வுச் சிந்தனை கொள்ள இந்த நூல் பெரிதும் துணை செய்கிறது. தமிழ் மொழி குறித்த கூடுதல் சிந்தனைக்கு இது வழி வகுக்கும். தமிழர்க்குப் பிற தளங்களில் நின்று தமிழாய்வு செய்திட இந்நூல் அடி எடுத்துக் கொடுக்க வல்லது. நூலாசிரியர் தமிழ் உலகில் நன்றியுடன் நினைவுகொள்ளத்தக்கவர். பாராட்டுக்கள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிறுவப்பெற்றுள்ள பல அறக்கட்டளைகளில் காலத்தால் முற்பட்டதான டாக்டர் மு.வ. பெயரில் பலரால் நிறுவப்பெற்றுள்ள இந்த அறக்கட்டளையின் 12ஆம் சொற்பொழிவு இது. இப்பொழிவன்றே அதன் எழுத்துரு நூலாக அச்சிடப்பெற்று வெளியிடப்படுவதும் பாராட்டுக்குரியது.

இச்சொற்பொழிவு நூலைச் செம்மையாகப் பதிப்பித்தும் மெய்ப்புத் திருத்தமும் செய்த இந்நிறுவனப் பணியாளர் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், கணியச்சிட்ட திருமதி பா. கௌசல்யா அவர்களுக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் நிறுவனத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியரைப் பற்றி.....

தமிழவன் பெங்களூர் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர்.

திராவிடப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்.

சாகித்திய அக்காதெமியின் மொழிபெயர்ப்புத் துறையில் இயக்குநராகச் செயலாற்றியுள்ளார்.

2001இலிருந்து 2005 வரை வார்ஸா பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகக் கடமையாற்றியவர்.

தமிழ்த் திறனாய்விலும் நாவல் படைப்பிலும் ஈடுபாடுள்ளவர்.

# முன்னுரை

இந்நூலில் நான்கு கட்டுரைகள் உள்ளன. நான்காவது கட்டுரை குறுநூல் அளவு நீண்டது. இந்த நான்கு ஆய்வுகளும் சமீபகாலத்தில் மேற்கில் பரவியுள்ள அமைப்பியல், குறியியல் போன்ற துறைகளின் மையக்கருத்துக்களையும் தமிழில் உள்ள கருத்துக்களையும் ஒப்பிடுகின்றன. முக்கியமாகப் பழந்தமிழ் இலக்கணம், உரை மற்றும் பழைய இலக்கியத்தை மேற்கத்திய மொழியியல், அமைப்பியல், குறியியல் நோக்கில் அணுகும்போது புதிய கருத்துக்கள் தோன்ற வழியுண்டாகும் என்பதனை இக்கட்டுரைகள் விளக்குகின்றன.

கடந்த சுமார் 20 ஆண்டுகளில் நிகழ்ந்துள்ள புதிய ஆய்வுகள் பற்றிய அறிமுகம் ஆய்வாளர்களுக்கும் மாணவர்களுக்கும் போய்ச் சேரவேண்டுமென்பது என் ஆசை. இந் நூல் அந்த ஆசையை நிறைவு செய்கிறதென்று கருதுகிறேன்.

நிறுவன இயக்குநர் குணசேகரன் அவர்கள் இதுபோன்ற ஆய்வுகளில் காட்டும் ஆர்வத்தால் இந்நூல் இந்த வடிவில் வருகிறது. அவருக்கு நன்றி.

பெங்களூர் தமிழவன்

# உள்ளே

# மொழியியலும் இலக்கியமும்

மொழியியல் ஆய்வுமுறையைப் பிற துறைகளுக்கும் பயன்படுத்துவது பற்றி லெவி ஸ்ராஸ் இவ்வாறு கூறுகிறார் :

> *மொழியியல் ஒரு சமூகவிஞ்ஞானம். எனினும் பிற சமூக விஞ்ஞானங்களுக்கிடையில் மொழியியலுக்குத் தனி இடம் உள்ளது. ஏனென்றால் இது பிற சமூக விஞ்ஞானங் களைவிடச் சற்று மேம்பட்டது. மொழியியலில்தான் இது வரை உள்ளதில் மிக அதிகம் வளர்ச்சி நடைபெற்றுள்ளது. எனவேதான் இது பிற சமூக விஞ்ஞானங்களைவிட வளர்ச்சி பெற்றதாகிறது. இதுதான் உண்மையான விஞ்ஞானம் என்றும் கூறலாம். ஏனெனில் சோதித்துப் பார்க்கும் முறையும், அலசலுக்குட்படுத்தப்படும் தரவு களைப் பற்றிய அறிவும் இத்துறையில்தான் உண்டு.*

அவரது "அமைப்பியல் மானுடவியல்" என்ற நூலில் வரும் 'மொழியியலிலும் மானுடவியலிலும் அமைப்பியல் ஆய்வு' என்ற கட்டுரையில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். லெவி ஸ்ராஸின் கூற்றுக்களை நுணுகிப்பார்த்து அதன் விசேஷ அம்சங்களைத் தனிப்படுத்தி ஏன் இவர் கருத்துக்கள் சமூகவிஞ்ஞானங்களின் தலைகீழ் மாற்றத்துக்கு வழிவகுத்தன என்றெல்லாம் பார்க்க வேண்டும். அதற்குமுன் மொழியியலின் வேறொரு பிரிவு பற்றிக் கூறவேண்டும்.

இந்த வேறொரு வகை மொழியியல் மற்றும் மொழி பற்றிய சிந்தனை, மொழியைக் கருவியாகப் பார்ப்பதாகும். அதாவது இலக்கியத்தின் ஊடகம் இங்குக் கவனம் பெறுகிறது. இலக்கியத் துவம் கூடச் சிலவேளை இச்சிந்தனையாளர்களிடம் மொழியாகச் சிறுமைப்படுகிறது. மொழியைக் கருவியாகப் பார்ப்பவர்களே நடையியல் என்ற துறையைச் சார்ந்தவர்களாவர் என்பார் த்சேவதன் தொதராவ் (Tzeveten Todorov). எனவே நடையியல் துறை சார்ந்தவர்களும், இலக்கியத்தை மொழி என்னும் கருவி உட் பொதிந்து வைத்திருக்கிறது என்று கருதுகிறார்கள் என்றறிகிறோம். மேலும் இவர் நடையியல், இலக்கியத்திற்கும் மொழியியலுக்கும் இடையில் உள்ள எல்லைப்பிரதேசத்தில் காணப்படும் ஒன்றாகும் என்றும் கூறுவது கவனத்துக்குரியதாகும்.[1]

எனவே லெவி ஸ்ராஸ் மொழியியல் என்று கூறுவதற்கும், நடையியல் துறையைச் சார்ந்தவர்கள் மொழியியல் என்று கூறுவதற்கும் உள்ள வேறுபாடு இங்கு வெளிப்படுகிறது. அதுபோலவே 'அமைப்பியல் மொழியியல்' என்று லெவி ஸ்ராஸ் கூறுவதற்கும், பிறமொழியியல் அறிஞர்கள் கூறுவதற்கும் வேறுபாடு உள்ளது. உதாரணமாக ஜோன் லயன் (John Lyon) தனது கட்டுரையாகிய 'அமைப்பியலும் மொழியியலும்' என்பதில் அமைப்பியல் மொழியியல் வாதிகள் என்று, இருவகையினர் உள்ளனர் என்று கூறி, இரு குழுவினரின் வித்தியாசங்களைத் தெளிவுபடுத்துகிறார்.[2]

ஜோன் லயன் கூற்றுப்படி ஒன்று மிகப்பிரபலமான அமெரிக்க மொழியியல். இது 1940களிலும் 50களிலும் புகழ்பெற்றது. இது புளும்பீல்டுக்குப் பிந்திய மொழியியல்பள்ளி. இக்குழுவினரின் உயர்பட்ச முயற்சியாக முனைகொண்ட கோட்பாடு "அமைப்பியல் மொழியியல் ஆய்வுமுறைகள்" (Methods in Structural Linguistics) என்ற ஸெல்லிக் ஹாரிஸின் புகழ்பெற்ற நூலிலே வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும் ஜோன் லயன் இந்தப் பள்ளியின் மொழியியல் ஆய்வுமுறையாகச் சிலவற்றை வரிசைப்படுத்துகிறார். அவை :

1. ஆய்வுப்பொருளை அடிப்படையாகக் (Corpus based) கொண்டது. ஆகையால் பெர்டினன்ட் டி. சசூரின் 'லாங்' (langue) 'பரோல்' (parole) - ஐ ஏற்காது.
2. இது வகைப்படுத்தலைச் (taxonomic) சார்ந்தது.
3. பொருள் ஆராய்ச்சி இங்கு முக்கியமல்ல.
4. மொழியின் மேற்பரப்பை ஆய்வது.
5. சில விதிமுறைகளில் (inductive) இருந்து ஆய்வைத் தொடங்கலாம்.

ஜோன் லயன் இங்கு நோம் சொம்ஸ்கி இந்தப் பள்ளியிலிருந்து ஆய்வுப்பயிற்சி பெற்றவர் என்றும், பின்னர் இச்சிந்தனையை உதறிவிட்டுத் தன் பள்ளியை நிறுவியவர் என்றும் கூறுகிறார். மேலும் லயன், இந்த 'மொழியில் அமைப்பியல்' வேறொரு 'அமைப்பியல் மொழியியல்' பள்ளியிலிருந்து மாறுபட்டதென்று கூறி அந்த வேறொரு பள்ளி, பெர்டினன்ட் டி சசூர் என்பவரின் மொழியியல் சிந்தனைகளின்மீது கட்டப்பெற்றதென்கிறார். இப்பள்ளியினர் கீழ்க்கண்ட முக்கியச் சிந்தனைகளைக் கொண்டிருந்தனர்.

1. மொழி எழுத்தாலும் ஒலியாலும் ஆனது. அதாவது மொழி அடையாளக்குறி (sign)களால் ஆனது. குறிக்கும் அது சுட்டும் பொருளுக்கும் (object) இடுகுறி உறவே உண்டு.

2. மொழி (லாங்) பேச்சின் (பரோல்) மூலம் வெளிப்படும் போது தொடர்பாட்டு (syntagmatic) உறவும் வாய்பாட்டு (paradigmatic) உறவும் கொண்டிருக்கும்.

3. மொழியின் அடையாளக்குறிகள் இருதளங்களில் இயங்கும்; ஒன்று சப்தத்தளம் (signifier): இன்னொன்று பொருள்தளம் (signified).

4. இருமொழி அம்சங்களின் காலமாறுபாடு என்பது இரண்டாம் அம்சம் முதல் அம்சத்திலிருந்து சில தொடர்பாட்டுத் தளங்களில் சஞ்சரித்ததேயாகும்.

இவ்வாறு இதுவரை இருவகை அமைப்பியல் மொழியியல் குழுக்கள் இருந்ததையும், அவற்றின் பண்பும் அடிப்படையும் பற்றியும் அறிந்தோம். அதாவது முதல் பள்ளி, மொழியை ஒரு பொருளாய் ஆய்ந்தது; இது இயற்கை விஞ்ஞானியின் ஆய்வுநெறி. சசூர் வழியில் ரோமன் யாக்கப்ஸன், ஹெம்ஸ்லேவ் போன்றோரின் ஆய்வு, மொழியை ஒரு ஆய்வுப்பொருளாய்ப் பார்க்காது ஓர் ஆய்வு 'மாதிரி' (model) யாகப் பார்ப்பது. இயற்கையாகப் பார்க்காததால் 'மாதிரி' என்பது ஓர் இயல்பு அற்றதாகிறது. எங்கும் பொருந்து வதாகிறது. ஒரு துறையின் ஆய்வுமுறை எளிதாய் இன்னொரு துறைக்குப் பயன்படுவதாகிறது.

இவ்வாறு இந்த இரண்டாம் பள்ளியினர் மொழியை ஒரு 'மாதிரி'யாகப் பார்ப்பதற்கு அவர்களிடம் இருந்த 'மொழி என்பது குறிகளின் தொகுப்பே' என்ற அறிவு காரணமாயிற்று. எனவே மொழியியல் என்பது குறிகள் பற்றிய ஒரு புதுவகை விஞ்ஞானம் என்ற கருத்து அடுத்தபடி தோன்றியது. பெர்டினன்ட் டி சசூர் தன்காலத்திலேயே குறியியல் என்று ஒரு புதுவிஞ்ஞானம் வரப்போகிறது என்று ஆரூடம் கூறினாலும் பலதுறைகளின் கவனம் இத்துறைமீது திரும்பியது மிகவும் பிந்திய காலத்தில்தான். லெவி ஸ்ராஸ் தன் துறையான மானுடவியல்கூட இந்தக் குறியியல் (semiotics) என்ற துறையின் ஒரு கிளையே என்று ஒரு கட்டத்தில் கூறினார். மானுடவியல் மூலம் ஆய்வுக்குட்படுத்தும் பொருள், மனிதன் சம்பந்தப்பட்ட குறிகள் என்பது இதன் பொருள். குறியியலின் தோற்றமும் பரவலும் பிற சமூக விஞ்ஞானத் துறைகளும்கூடக் குறிகளாய்த் தம்மை அணுகும் முறையை ஊக்கப்படுத்த வழிவைத்தன. பின்பு தத்துவவாதியான சி.எஸ்.பியர்ஸ் (Pierce) என்ற அமெரிக்கர் குறியியலைத் தன் வழியில்

வளர்த்தெடுத்தார். இவ்வாறு தொதரோவ் கூறுவதுபோல் மொழியியல்தன்னைக் குறுக்கலுக்கும் எளிமைப் படுத்தலுக்கும் உட்படுத்தியபடியே புது ஆய்வுக்கு வழிவகுத்தது. ஏனெனில் எல்லா விஞ்ஞானங்களும் இவ்விருவிதக் குறுக்கல்கள் வழிதான் செயல்படுகின்றன. இவ்வாறு இங்கு நாம் கண்ட அமைப்புக்களும் குறிகளும் மொழிச்செயல் என்ற மனித நடவடிக்கை ஒன்றை விஞ்ஞானமாகக் கட்டமைத்திருக்கிறது. மனித நுட்பம், மனித உணர்வு போன்ற அகமுறைகள் இவ்வறு புறவயமாக்கப் பட்டிருக்கின்றன. எனவேதான் லூயி ஹெம்லேவ் (Luis Hjelmslev) மொழியின் ஆய்வுப் பொருள் (object of language) என்பது நுட்பமான சில மொழியியல் கூறுகளே என்று சொன்னார்.[3]

இப்போது 'மொழியில் அமைப்பியல்' என்ற மகுடத்துடன் உலகம் முழுதும் பரவிய அமெரிக்க வகைப்பட்ட மொழியியல் சிந்தனைதான் ஒரே வகை சிந்தனை என்ற தப்பெண்ணம் விலகுகிறது. அதிகமான மொழியியல் பிரக்ஞை தமிழகக் கல்வித்துறைகளில் இன்று காணப்படும் சூழலில் வேறு ஒரு மொழியியல் அமைப்பியல் உள்ளது என்ற சுட்டிக்காட்டல் தேவையான ஒன்று.

இப்போது இலக்கியத்தின் அடிப்படைகளில் மொழியியலின் அடிப்படைகள் உறவு கொண்டிருப்பது விளங்குகிறது. பல்வேறு முறைகளில் மொழியியலும் இலக்கியமும் நெருங்கி வருவதும் தெரிகிறது. ஜெராட் ஜெனி (Gerard Genette) என்பவர் இலக்கியம், மொழியாலும் அமைந்திருப்பதால் ஒரு மொழியியல் அணுகலுக்கே உரிய விஷயம் என்கிறார். ஒலியும், வடிவமும், சொல்லும், சொற்பிரயோகமும் (phrase) தான் மொழியியல்வாதிக்கும் மொழிநூலாளனுக்கும் (philologist) உரிய விஷயங்கள். இந்தப் போக்கின் விளைவாலேயே ரஷ்ய உருவவியல்வாதிகள் இலக்கியத்தை ஒரு கிளைமொழி ஆராய்ச்சியால் அணுகிவிடலாம் என்று கூறினார்கள். இவ்வாறு மொழியியல் மிக அதிகமான இறுக்கத் திற்கு ஆட்பட்டுப் புதிய எண்ணத்திற்கு ஆதரவு தராதிருந்தபோது அதிகம் சுதந்திரம் தரும் லெவி ஸ்ராஸின் "பிரிக்கோலேஜ்" என்ற சித்தாந்தம் இலக்கியத்திற்கும் பயன்படும் என்ற கருத்து தோன்றியது. "பிரிக்கோலேஜ்" என்பதை மரபு விஞ்ஞானத்திற்கு ஒப்புமைப் படுத்தினார் லெவி ஸ்ராஸ். இஞ்சினியரும் தட்டுமுட்டுச் சாமான் வேலைபார்ப்பவனும் இங்கு ஒப்பிடப்பட்டு, தட்டுமுட்டு ஆசாமி, எந்தக் கருவியும் இல்லாது உடனடி ஏதாவது ஒன்றைக் கருவியாகப் பயன்படுத்திச் செய்யவேண்டியதைச் செய்து முடித்து விடுகிறான். இது போல் படைப்பு ஒரு மொழி; அதன்மீது நடத்தப்படும் விமரிசனமும் ஒரு மொழி. விமரிசனம் இப்படி ஒரு மொழியின் -

மொழி (Meta-language) யாகிவிடுகிறது. இவ்வாறு படைப்பை ஒரு மொழியாக அணுகும்போது இந்த அணுகலில் மொழியியல் இதுவரை மொழியை விளக்க ஏற்படுத்திய கருத்தாக்கங்களும் விளக்கங்களும் வியாக்கியானங்களும் இனியும் பயன்படும் என்று எதிர்பார்க்க முடியாது. உதாரணத்திற்கு, மொழியியல் அறிஞர் என்று உலகமே ஏற்றுக் கொண்டாடும் ரோமன் யாக்கப்ஸனின் ஒரு கூற்றை ஜெராட் ஜெனி கவனத்திற்குக் கொண்டு வருகிறார்:

> கவிதை சந்தேகமில்லாமல் மீண்டும் மீண்டும் வரும் ஒலி வடிவம் (phonetic figure) தான்; ஆனால் அது மட்டுமே இல்லை..... வாலரி என்னும் கவிஞன் சொல்வதுபோல் கவிதை, ஒலிக்கும் அர்த்தத்துக்குமிடையிலான ஒரு மிக நீண்ட தயக்கம் (poem is a prolonged hesitation between the sound and the significance) ஆகும். வாலரியின் கூற்று, ஒலியாய்க் கவிதையைப் பிரிப்பதைவிட மிகக்கூடிய உண்மையையும் விஞ்ஞானத்தையும் கொண்டுள்ளது.[4]

ஜெராட் ஜெனி மிகுந்த குணரூபப்படுத்தலுக்கு ஆய்வு முறையை உட்படுத்துகிறார் என்று சொல்லித் தெரிய வேண்டிய தில்லை. இதைவிட அதிக உறுதிப்பாட்டுடன் பிற மொழியியல் கருத்தமைவுகள் இலக்கியத்தை அணுகுகின்றன. எனினும் ஜெராட் ஜெனி அவர்களின் குணரூபப்படுத்தல் (abstract) மிகுந்த சுதந்திரத்தை விமரிசகனுக்குக் கொடுக்கிறது. கணித சூத்திரங்கள் போல் மொழியியல் சூத்திரங்களைக் கவிதைக்குப் பொருத்து கிறவர்கள் அதிகம் இருக்கும் சூழலில் ஜெனியின் கருத்து மிகுந்த பயன் உள்ளது. எனினும் மேற்குறிப்பிட்ட ஜெனியின் கட்டுரை செய்பாட்டுத்திறனாய்வை ஒரு கவிதையையோ, நாவலையையோ வைத்துச் செய்யப்படவில்லை. அதனால் இவ்விஷயம் பற்றி அதிகம் பேசாமல் அடுத்த விதமான மொழியியல் ஆய்வுமுறைக்குச் செல்வோம்.

ரோமன் யாக்கப்ஸனும் லெவி ஸ்ராஸும் சேர்ந்து பிரெஞ்சுக் கவிஞர் சார்லஸ் பாதெலயரின் 'பூனைகள்' என்ற கவிதையை இலக்கியரீதியாய் அணுகியுள்ளனர். யாக்கப்ஸன் கவிதை இலக்கியத்தில் ஈடுபாடுள்ள கறாரான ஒரு மொழியியல்வாதி. லெவி ஸ்ராஸ் தத்துவப் பின்புலம் கொண்ட மானுடவியல்வாதி. இருவரும் சேர்ந்து அதுவும் அவர்களின் துறையல்ல என்று கருதப்பட்ட கவிதையை அணுகி எழுதியுள்ள கட்டுரை மிகவும் புகழ்பெற்றது. கவிதையின் ஒலியமைப்பை ஆய்ந்து கவிதையின் கவித்துவக் கட்டமைப்புடன் ஒலியமைப்புக்குத் தொடர்பு உள்ளது என்று விளக்கியுள்ளனர் இருவரும். இலக்கியம் முறைமைப்பட்ட ஆய்வுக்குப் புறம்பானது என்று கருதும் சிலரின் அறியாமையை இவர்கள் செயல்ரீதியாகச் சுட்டிக்காட்டினர் என்று

கருதலாம். ஒருவித இருமைக்கோட்பாடு (binary principle) கவிதையின் மொழி இலக்கண அமைப்பில்கூட அமைந்திருந்ததைக் காட்டினார்கள் இருவரும். இவ்விதமாய்க் கவிதைக்குள் ஒரு வளர்ச்சியிருப்பதையும் கவிதை ஒருவித எதார்த்தத்திலிருந்து (real) எதார்த்தமற்ற தளத்திற்கு நகர்வதையும் சுட்டினர். ரோமன் யாக்கப்ஸன் ரஷ்யாவிலிருந்து அமெரிக்காவிற்குக் குடியேறியவர் என்பதையும் ரஷ்யாவில் வடிவவியல் ஆராய்ச்சிக் குழுக்களில் மிகுந்த ஈடுபாடு காட்டியவர் என்பதையும் புரிந்துகொண்டால் அவருடைய இந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் உள்ள வடிவச் சிந்தனையை நாம் உணரமுடியும்.

முதலில் பார்த்த ஜெராட் ஜெனியின் மொழிபற்றிய எண்ணங்கள் ஒருவிதம் என்றால் ரோமன் யாக்கப்ஸன், லெவி ஸ்ராஸின் எண்ணங்கள் வேறுபட்டவை. இரண்டாமவரிடம் மொழி ஆய்வில் சற்று அதிகம் கறார்த் தன்மை காணப்படுகிறது.

மூன்றாவது முறையாக வேறு ஒரு அணுகல்முறை வருகிறது. அதுவும் யாக்கப்ஸனின் புகழ்பெற்ற மொழி ஆராய்ச்சி முறைதான். உளவியலில் கூட அம்முறை பயன்பட்டுப் பிரபலமானது. இங்கு இரண்டு சொல்லாட்சிகள் வருகின்றன. உருவகன் (Metaphor) என்பதொன்று. ஆகுபெயரன் என்பது (Metanymy) இன்னொன்று. இந்த இரண்டு கருத்தாக்கங்கள் மூலம் ரோமன் யாக்கப்ஸன் மனநிலை பிறழ்ந்த மொழிச் சிதைவுபெற்ற நோயாளிகளை இரண்டு வகையாகப் பார்க்க வகை செய்தார். அவர்களின் பேச்சு இருவிதமாய்ச் சிதைந்திருந்தன. ஒன்றில், சேர்க்கை நிலையில் (combination) ஒரு சொல் அடுத்துவரும் சொல்லோடு சேர்வதில் சிதைவு ஏற்பட்டிருக்கும். அல்லது ஒரு வாக்கியத்தில் வரும் சொற்கள் வேறொரு சொல்லுக்குப் பதிலாய் வரும் தேர்ந்தெடுப்பு நிலையில் சிதைவு (selection) ஏற்பட்டிருக்கும். இவ்வாறு பேச்சுச்சிதைவு, மொழியின் அடிப்படையில் அடையாளப்படுத்தப் பட்டது. 'தலைவர் மகிழ்ச்சியில் மிதந்தார்' என்ற வாக்கியத்தைத் 'தலைவர் மகிழ்ச்சியில் இருந்தார்' என்று கூறலாம். முதல் வாக்கியத்தின் 'மிதந்தார்' என்பதும் இரண்டாம் வாக்கியத்தின் 'இருந்தார்' என்பதும் ஒன்று இருக்க வேண்டிய இடத்தில் இன்னொன்று 'தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளது'. ஆனால் தலைவர்-மகிழ்ச்சியில்-இருந்தார் என்பதில் மூன்று வார்த்தைகளும் தத்தமக்குள் சேர்க்கை நிலையில் உறவு கொண்டுள்ளன.

'மிதந்தார்' என்று முடியும் வாக்கியம் உருவகன் தன்மையைக் கொண்டு விளங்குகிறது. ஆனால் 'தலை' கூட்டத்தில் இருந்தார் என்று தலைவருக்குத் 'தலை' என்ற ஒரு பகுதியை (part)

வைத்துப் பேசுவோமென்றால் இது ஆகுபெயரன் ஆகிவிடுகிறது. தமிழில் ஆகுபெயர் சற்று விரிவான உதாரணங்களைக் கொடுக்கும். எனவே Metanymy- ஆகுபெயரன் என இங்குக் குறிப்பிடப்படுகிறது. தமிழ் இலக்கணப் பிரச்சினைகளுக்குள் செல்லாமல் மொழியியல் கருத்துக்களை மட்டும் தொட்டுப்பேசுவோமானால் 'மிதந்தார்' என்று சொன்னவுடன் ஒரு கற்பனை அம்சம் கலந்துவிடுவது தெரிந்துவிடுகிறது. தலைவரின் மகிழ்ச்சி ஒரு கடல் அல்லது நீர்நிலை என்று நம் மனதில் படிமங்கள் உருவாகின்றன. கடல் என்பதோ நீர்நிலை என்பதோ சொல்லளவில் இல்லை என்றாலும்கூட 'மிதந்தார்' என்ற வினைச்சொல் தன் சேர்க்கை நிலைப் 'பெயர் களாய்'க் கடல், நீர்நிலை என்பவைகளை மனதில் கொணர்கின்றன. இது இப்படியே எங்கெங்கோ போகும். இதுதான் மொழியின் அதிஅற்புதச் செயல். மொழி வேறு ஒன்றை உணர்த்துகிறது. இது ஒரு மொழிகடந்த நிலை என்றால், 'தலைவர்' என்பதற்குத் 'தலை' என்ற குறி பயன்படுத்துவது இன்னொரு வகை மொழிகடந்த நிலை எனலாம். இவ்வாறு மொழிக்குள் வரும் நிலைகள் மற்றும் மொழிகடந்த நிலைகள் என்னும் இரு உலக சஞ்சாரமே மொழியின் மூலம் மனிதகுலம் மேற்கொள்ளும் செயல்.

தமிழ்மொழியில் சில மொழிகடந்த நிலைகள் உள்ளன. உதாரணம் தொகை. உருபுகள் தொக்கிநிற்கும் போதோ பண்புகள் தொக்கி நிற்கும்போதோ, இப்படி சில மொழி இடைவெளிகளை- மொழி என்ற வரையறைக்குள் வைக்கிறோம். 'மலர் போன்ற முகம்' என்ற உவமையை 'மலர்முகம்' என்று உவமைத்தொகையாக்கும் போது மொழி நிலை கடந்த கவிதை என்றும் கூறுகிறோம். அதாவது மொழிகடந்த நிலையாகிறது. இது ரோமன் யக்கப்ஸனுக்கு மொழிகடந்த நிலையாக (கவிதைமொழி) இருக்காது.

ரோமன் யாக்கப்ஸனின் ஆகுபெயர், உருவகன் சார்ந்த சிந்தனைகள் இந்த மொழிசார்ந்த நிலை, மொழிகடந்த நிலை (கவிதை) என்ற பாகுபாட்டை இங்கு நிராகரிக்கின்றன. அமைப்பியலில் நடந்த பெரிய சிந்தனைமாற்றம் கவிதையையும் கற்பனையையும்கூட மொழியாகப் பார்த்ததுதான். அல்லது மொழிபோலப் பார்த்ததுதான். மீண்டும் இக்கட்டுரை தொடங்கிய இடத்திற்கு வரவேண்டும். மொழியை உள்ளீடற்ற குறிகளின் தொகுப்பாய்ப் பார்த்ததன் தொடர்ச்சியாக இங்கும் பல்வேறு குறிகள் தத்தமக்குள் தொக்கியும் (இடைவெளி) தொடர்ந்தும் அமைவதைக் காண்கிறோம். தொக்கி நிற்கும் குறிகளில் சிலவற்றை மொழிவரம்புக்குள் கொண்டு வந்தும், வேறு சிலவற்றை மொழி வரம்புக்கு வெளியில் கொண்டுபோய் இது கவிதை, அல்லது அலங்காரம் சார்ந்தது என்றும் கூறுவது தர்க்கத்திற்குப் புறம்பானதாகிறது.

இங்குதான் மரபு என்ற கருத்தாக்கம் வருகிறது. மொழியியலில் வரலாற்று மொழியியல் ஆழ்ந்த அணுகலுக்குரியதாகிறது. இவை இங்கு நம் குறியல்ல என்பதால் இவ்விவாதத்தை விட்டுவிட்டு அடுத்த கருத்துக்குச் செல்வோம்.

தொல்காப்பியம் பெயரியலில் சொன்மை, பொருண்மை பற்றிப் பேசும்போது பொருண்மை இருவகைப்படும் என்று கூறி ஒன்று, 'தெரிபுவேறு நிலையல்' என்றும் இன்னொன்று 'குறிப்பில் தோன்றல்' என்றும் கூறுகிறது. குறிப்பில் தோன்றல்பற்றிக் கூறும்போது அதனை நன்னூல் எட்டு வகையாகப் பிரிக்கிறது.[5] அவை கீழ்வருவன:

1. ஒன்றுஒழிந்த பொதுச்சொல். பல பொருள்களுக்கும் உரிய பொதுச்சொல், ஒரு பொருளைவிட்டுத் தொடர்ந்து வரும் சொல்லின் மூலம் வேறு பொருளைச் சுட்டுவது. உ-ம்: 'ஆயிரம் மக்கள் பொருதார்' என்பதில் மக்கள் ஆண்களை மட்டும் சுட்டுவது.
2. விகாரம் : கரும்புவில் என்பதற்குப் பதில் 'கருப்புவில்' என்று செய்யுளில் வருவது.
3. தகுதி : செத்தாரைத் தூங்கினார் என்று கூறுவது.
4. ஆகுபெயர் : ஒன்றன் பெயர் அதனோடு தொடர்புடைய பிறிது ஒன்றிற்கு ஆகிவிடுவது.
5. அன்மொழி : இரண்டு சொற்கள் சேர்ந்து வேறு பொருளை உணர்த்துவது. உ-ம்: 'பொற்றொடி' என்பது பொன்னால் ஆன தொடி. பொற்றொடி வந்தாள் என்பது தொடி அணிந்த பெண்ணைக் குறிக்கும்.
6. வினைக்குறிப்பு: ஒரு சொல் பெயர்ச்சொல்போல் காணப்பட்டாலும் அதுவினைச்சொல் என்று குறிப்பால் அறிவது. 'அவன் பொன்னன்' என்பதில் பொன்னை உடையவன் எனக் குறிப்பால் அறியலாம்.
7. முதற்குறிப்பு: ஒரு செய்யுளின் அல்லது தொடரின் முதல் ஓரிரு சொற்களைக் கூற அனைத்தையும் குறிப்பது உ-ம்: 'அகரமுதல' என்பது முழுக் குறளையும் உணர்த்தும்.
8. தொகைக்குறிப்பு : ஒரு எண்ணுத் தொகையைக் குறித்த மாத்திரத்தில் முழுப்பொருளும் உணர்வது. உ-ம் நால்வர் என்பது சமயக் குரவர் நால்வரை உணர்த்துவது.

இவ்வாறு இந்த எட்டுவகைக் குறிப்பில் தோன்றல் என்ற பொருண்மையிலும் சொற்கள் தத்தம் பொருளைவிட்டு அவற்றோடு

தொடர்புடைய வேறு பொருளைத் தந்தன. தம்பொருளை விட்டு வேறு பொருளைக் குறிப்புணர்த்துவது ஆகுபெயரனின் (Metanymy) குணமாகும். 'தலை' என்பது தலைவரைக் குறித்ததுபோல. அதாவது ஒரு சொல் வேறு ஒரு சொல்லை உணர்த்துகிறது. இலக்கண விளக்கம், முத்துவீரியம், பிரயோகவிவேகம், நன்னூல் முதலியனவும் இவ்வகையிலேயே 'குறிப்பில் தோன்றல்' என்ற கருத்தாக்கத்தை விளக்குகின்றன. மொழியின் இடைவெளி சார்ந்ததாகவே இவை எல்லாம் அமைகின்றன. எனவே மொழிக்குள் உள்ள நிலைகளே இவை. மொழிகடந்த நிலை அல்ல என்றே கூறல் வேண்டும்.

'குறிப்பில் தோன்றலை' ஆ. சிவலிங்கனார் அவர்கள் உள்ளுறை உவமையுடன் இணைத்துச் சிந்திக்கிறார். இதனை "அகப்பொருள் செய்யுளில் வரும் தொடர் பொருளில் உள்ள குறிப்புப் பொருளுக்கு 'உள்ளுறை' என்ற பெயர் வைத்தனர்" என்கிறார்.[6]

ஏற்கெனவே நாம் பார்த்துள்ளதுபோல் உருவகன் என்பது ரோமன் யாக்கப்ஸனின் கூற்றுப்படி மொழியின் தேர்ந்தெடுப்புத் தளத்தை (Selection axis)ச் சார்ந்தது. இதனை வாய்பாட்டு மொழிச் செயல்முறை என்று ஏற்கெனவே பார்த்தோம். ஆகுபெயரன் எவ்வாறு சேர்க்கை நிலையில் மொழியைச் செயல்படுத்துகிறதோ அதுபோல் உருவகன் வேறு வகையாகச் செயல்படுகிறது. 'நீ வீட்டுக்கு வா' அல்லது 'நீ கடைக்கு வா' என்னும் வாக்கியங்களில் 'வீட்டுக்கு' என்பது தேர்ந்தெடுக்கப்படலாம். பேசுபவர், கேட்பவர், பேசப்படும் அல்லது கேட்கப்படும் சூழலுக்குத்தக இந்தத் தேர்ந்தெடுப்பு நடைபெறும். இந்தத் தேர்ந்தெடுப்பு 'உருவகனில்' நடக்கிறது. அதே நேரத்தில் கடைக்கு என்பதும் வீட்டுக்கு என்பதும் உள்ளுறைகள் எனவும் கூறலாம்.

இந்தப் பின்னணியில் ஆ. சிவலிங்கனாரால் குறிப்புப் பொருள் எனக் கூறப்படும் உள்ளுறைக்கு வரவேண்டும். உள்ளுறை உவமையை விளக்குவதற்காக அகநானூற்றில் வரும் ஒரு கவிதையைப் பார்க்கலாம். இக்கவிதையின் பொருள் இது.

> சேற்றில் கட்டப்பட்டுள்ள ஒரு எருமை கட்டப்பட்டிருந்த இடத்திலிருந்து விடுபட்டு வழியில் இருக்கும் கூரான முள்வேலியைத் தனது கொம்பால் நீக்கி நீர் நிறைந்த வயலில் மீன் ஓடி ஒளியும்படிப் பாய்ந்து வண்டு மொய்த்த தாமரையின் மலரை உண்ணும்.

இத்தகைய ஊரின் தலைவனே!

நீண்ட கூந்தலையுடைய ஒரு பெண்ணைத் திருமணம் செய்தாய் என்கிறார்கள். போரில் யானைகளைக் கொன்ற ஒளிவிடும் சேனைகளையுடைய செழியன் பிண்டநெல் அழகிழந்து சிதறிக்கிடப்பது போல எம் தலைவியின் தொடிகள் அழகிழந்து நெகிழ்ந்துள்ளன. நீ இங்கு எம் வாயிலுக்கு வரவேண்டாம். அங்குச் செல். உன்னைத் தடுப்பவர் யார்?[7]

இப்பாடலை ஆய்ந்துள்ள முனைவர் குளோறியா சுந்தரமதி அவர்கள் பாடலின் பண்பை இருவகையாகப் பிரிவு செய்கிறார்கள்.[8]

**கருப்பொருள்**

1. எருமை
2. சேற்று நிலை
3. கட்டுப்பாடுகளை நீக்குதல்
4. முள்வேலி நீக்குதல்
5. தாமரை
6. எருமை தாமரையை உண்ணல்

**உள்ளுறை**

1. தலைவன்
2. தலைவன் இருக்குமிடம்
3. சமூகத்தளை நீக்குதல்
4. பெண் காவலர்களை நீக்குதல்
5. பரத்தை
6. தலைவன் பரத்தையைச் சேர்தல்

இங்கு முனைவர் குளோறியா சுந்தரமதி அவர்கள் விளக்கியுள்ளதுபோல் உள்ளுறை மரபு தெரிந்தவர்கள் மட்டுமே பொருள் கூறமுடியும். மொழிபெயர்ப்பில் பிற மொழியினர் இப்படிப் பொருள் தரமுடியாமல் போகலாம். எனவே மரபு அறிவு முக்கியமாகிறது.

எவ்வாறு 'தலைவர் மகிழ்ச்சியில் மிதக்கிறார்' என்று சொன்னவுடன், 'மகிழ்ச்சி' என்பது எப்படி ஒரு கடல் அல்லது நீர்நிலைபோல என்று ஒரு ஒப்புமை மனதில் நினைவு வருகிறதோ அதுபோல் இங்கும் தலைவனுக்கு எருமை ஒப்புமை வருகிறது. 'தலைவர் மகிழ்ச்சியில் இருக்கிறார்' என்பதன் மறுவடிவம் 'தலைவர் மகிழ்ச்சியில் மிதக்கிறார்' என்பது. அதுபோல் தலைவன் (நாயகன்)

எருமை, நீர்நிலையில் செல்வதுபோல வாழ்கிறான் என்ற ஒப்புமை எண்ணம் உள்ளது. 'மகிழ்ச்சி' என்பதற்குக் 'கடல், அல்லது நீர்நிலை' எவ்வாறு உள்ளுறையாய் நிற்கிறதோ அதுபோல் தலைவனுக்கு எருமை ஒப்புமை உள்ளுறையாய் உள்ளது. பாட்டில் வரும் 'வண்டூது பனிமலரை எருமை தின்னும் ஊரைச் சார்ந்தவனே' என்ற வரியில் 'ஊரைச் சார்ந்தவனே' என்ற சொல்லுக்கு இங்குப் பார்த்த 'மிதக்கிறார்' என்ற சொல்லின் உருவகத் தன்மை (Metaphoric Character) அமைந்திருப்பது இந்த நம் அணுகல் மூலம் வெளிப் படுகிறது. 'தலைவர் மகிழ்ச்சியில் மிதக்கிறார்' என்ற வாக்கியத்தில் எப்படி மிதக்கிறார் என்ற 'பொருந்தாச் சொல்' பல்வேறு கற்பனைகளுக்கும் ஒப்புமைகளுக்கும் வழிவகுக்கிறதோ அது போல் 'ஊர' என்ற சொல், மேலே குளோறியா சுந்தரமதி அவர்கள் விளக்கியதுபோல் சுமார் ஆறு ஒப்புமைகளைக் கற்பனையில் தருகிறது. "உள்ளுறுத்து இதனொடு செத்துப்பொருள் முடிகென உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்'' என்ற தொல்காப்பியரின் கருத்து விளக்கப்படுகிறது. அதாவது உள்ளுறுத்தலும் ஒத்தலும் இங்கு வரவேண்டும்.

எனவே இந்த உள்ளுறை உவமை, ஒப்புத்தன்மை (comparison) கொண்டு தேர்ந்தெடுப்பு மொழிச் செயல்பாட்டை காட்டுகிறது இங்கே எனக் கூறலாம்.

1. எருமை தளையிலிருந்து விடுபட்டுக் கொம்பால் வேலி நீக்கி வயலில் மீன்கள் ஓடும்படிப் போய்த் தாமரையைத் தின்னுகிறது.

2. தலைவன் வீட்டைவிட்டுச் சமூகத்தளைகளை நீக்கி, பெண் காவலை ஒதுக்கிப் பரத்தையிடம் போகிறான்.

இந்த இரண்டு வாக்கியங்களையும் இப்பாடலில் பார்க்கிறோம். எப்படி கடல், நீர்நிலை என்ற பதங்கள் ஒப்புச் சிந்தனை மூலம் வருவிக்கப்பட்டனவோ அதுபோல் இங்கும் ஒரு தொடர் ஒப்புச் சிந்தனை மூலம் வருவிக்கப்பட்டுள்ளது. இந்தத் தொடர் கவிதையில் இல்லாமல் இருக்கிறது. எனினும் கவிதைக்குள் இத்தொடர் சேர்க்கை நிலையில் விடுவிக்கப்பட்டுள்ளது என்றால் உருவகன் சிந்தனை முறை இங்குச் செயல்படுகிறதென்று கூறுவதில் தவறேதும் இல்லை. ரோமன் யாக்கப்ஸன் ஆகுபெயரனையும் உருவகனையும் மொழிசெயல்படும் முறையைச் சார்ந்ததாய்த்தான் பார்க்கிறார். கவிதை என்பதும், அணி என்பதும் மொழிக்கு வெளியில் உள்ள செயல்முறை. மொழி மூலம் சொல்லப்படும் விஷயத்தில் உள்ள பண்புதான் (மொழிக்கு வெளியில்) முக்கியம் இங்கு.

இப்போது நாம் பார்த்த குறிப்பில் தோன்றலுக்கான எட்டுவகைகளும் மொழி செயல்படும் முறையைச் சார்ந்தவை என்ற முடிவை உறுதிசெய்ய முடியும். அது போல் உள்ளுறைஉவமை செயல்படுவதுகூட மொழிச் செயல்பாடே. ஏனென்றால் சற்று நீட்சிப்படுத்தப்பட்ட அர்த்தத்தில் உள்ளுறைஉவமை ஒரு உருவகன் செயல்படும் தன்மையைத்தான் காட்டுகிறது. உருவகனில் தேர்ந்தெடுப்பு நடக்கும்போது (இது ஒரு சொல்லிலும் நடக்கலாம், அல்லது வாக்கியத்திலும் நடக்கலாம்.) தேரப்படுகிற சொற்களுக்கும் வாக்கியத்திற்கும் தக பெருள் மாறுபடும். இங்குச் சொல்லும் வாக்கியமும் பதிலி (substitution) செய்யப்படுகின்றன எனலாம்.

| 1 | 2 | 3 |
|---|---|---|
| எருமை | தளையை நீக்கி, காவலை ஒதுக்கி | தாமரையைத் தின்னும் |
| தலைவன் | | பரத்தையிடம் போவான் |

இவ்வாறு மூன்று கட்டங்களில் பதிலிச்செயல் நடைபெறுகிறது. இவ்வாறு தெளிவாக உள்ளுறை உவமம் மொழிக்கட்டமைப்புக்குள்தான் தொழில்படுகிறதென்று சந்தேகமறக் கூறலாம். இப்போது இந்த உள்ளுறை உவமம் ஏன் அணியாகக் கருதப்படுகிறது என்ற கேள்வியும் வருகிறது. அணி என்ற கருத்தாக்கம் வடமொழியின் பாதிப்பால் ஏற்பட்ட ஒன்றோ என்ற கருத்தும் ஆயத்தக்கது. ஜோர்ஜ் ஹாட் (George Hart) தமிழ்மொழியின் அமைப்பு, குறிப்புப் பொருளுக்குச் சமஸ்கிருதம், பிராகிருதத்தைவிட அதிகம் வசதி செய்து தருகிறது என்று கூறுவது இங்குக் கருதத்தக்கது.[9]

## குறிப்புக்கள்

1. பார்க்க: ஸ்சேவதன் தொதரவின் 'மொழியும் இலக்கியமும்' என்னும் கட்டுரை. இது 'அமைப்பியல் விவாதம்' என்ற நூலில் (Ed. by R. Macksey & E.Donato, London, 1972) உள்ளதாகும்.
2. பார்க்க: ஜோன் லயனின் 'அமைப்பியலும் மொழியியலும்'. இக்கட்டுரை Structuralism: An Introduction, Ed. David Robey (Oxford, 1976) என்ற நூலில் உள்ளது.
3. பார்க்க : ஆந்ரே மார்த்தினெ எழுதிய கட்டுரை 'அமைப்பும் மொழியும்'. இக்கட்டுரை Jacques Ermann பதிப்பித்த Structuralism என்ற நூலில் உள்ளது.

4. மேற்கோளாக இக்கருத்து H.S. Gill பதிப்பித்த Structuralism and Literary Criticism, New Delhi, 1979) (New York, 1970) என்ற நூலில் வருகிறது.

5. ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகுபெயர் அன்மொழி வினைக்குறிப்பே
முதல்தொகைக் குறிப்போடு இன்ன பிறவும்
குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை (நன்: 269).

6. பார்க்க: ஆ. சிவலிங்கனாரின் "தொல்காப்பியம் கூறும் உள்ளுறையும் இறைச்சியும்" (சென்னை, 1985) என்ற நூல்.

7. சேற்று நிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர
யாரை யோநிற் புலக்கேம் வாருற்று
உறையிறந் தொளிரும் தாழிருங் கூந்தல்
பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து
வதுவை அயர்ந்தனை யென்ப அஃது யாம்
கூறேம், வாழியர் எந்தை செறுநர்
களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்
ஒளிறு வாட்தானைக் கொற்றச் செழியன்
பிண்டநெல்லின் அள்ளூரன்ன என்
ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெரும நின்தகைக்குநர் யாரோ? (அக. 46)

8. பார்க்க: Journal of The Department of Tamil, University of Kerala, 1970.

9. பார்க்க ஜோர்ஜ் ஹாட்டின், The Poems of Ancient Tamil, p.182.

# சொல்லாடல்

தொல்காப்பியரின் பொருண்மையும் சொன்மையும் பெர்டினன்ட் டி சசூரின் (Ferdinand De Saussure) குறிப்பீடு (Signified) மற்றும் குறிப்பான் (Signifier) என்ற இரு கருத்தாக்கங்களோடு தொடர்புடையன என்று சமீப காலங்களில் பேசப்பட்டு வருகிறது. (பார்க்க : தமிழவன், தமிழும் குறியியலும்). பெர்டினன்ட் டி சசூர் மரம் என்ற கருத்துக்கும் (குறிப்பீடு) ம-ரம் என்ற ஒலித் தொடர்ச்சிக்கும் உள்ள தொடர்பாக இவ்விரு சொற்களைப் பார்க்கிறார்.

இச்சிந்தனைகளோடு தொடர்புடைய சமஸ்கிருத கருத்தாக்கங்களையும் பார்ப்பது பயனுடையது. இச்சிந்தனைகள் பத்ருகிரி என்ற சமஸ்கிருத அறிஞரின் 'வாக்கியபாதிய'' (Vākyapadiya) என்ற நூலில் உள்ளன. அதாவது சொல்லுக்கும் (śahda). அர்த்தத்திற்கும் நடுவில் 'ஸ்போட்டம்' (spota) என்னும் வெடிப்பைக் கண்டுபிடிக்கிறார் பத்ருகிரி. இந்த ஸ்போட்டத்தால்தான் ஒருவர் ஒரு சொல்லைப் பேசும்போது அடுத்தவர் அதன் அர்த்தத்தைப் புரிந்துகொள்ளமுடிகிறது. அதாவது ஒலிரூபப்படுத்தப்பட்ட சொல்லுக்கும் (இதனைப் பத்ருகிரி 'தொனி' (ஒலி) என்கிறார்.[1] கருத்தைப் புலப்படுத்தும் சொல்லாகிய ஸ்போட்டத்திற்கும் ஒரு தொடர்பு இருப்பதால்தான் பொருள் மனதில் புலப்படுகிறது. அதாவது அறிவு மொழிரூபத்தில் இருக்கிறதென்று இதிலிருந்து பெறப்படுகிறது என்கிறார் கபில் கபூர்.[2] இச்சொல்லின் பொருள் 'வெளிப்பட்டுத்தோன்றும் ஒன்று' (that which becomes manifest) என்பது ஸ்போட்டம் இலக்கணக்காரர்களால் ஒரு சப்தத்துவமாய்ப் பயன்படுத்தப்படுகிறது. இது தொனியிலிருந்து (ஒலியிலிருந்து) வேறுபட்டது என்பது இங்கு முக்கியமாய்க் கவனிக்கத்தக்கது. இலக்கணக்காரர்களின் எண்ணப்படி, இந்த ஸ்போட்டம் ஒலியிலிருந்து மாறுபட்ட வேறாக இருப்பது போலவே மொழியின் சாரமாகவும் (essence) பிரபஞ்சரீதியான நித்தியத்தன்மை கொண்டதாகவும் இருக்கும். இது சொல்லில் அல்லது வாக்கியத்தில் வரும் ஒலிபோல் தொடர்ச்சியுள்ளதாகவும் (sequential) தனியான தாகவும் (discrete) அமைந்ததல்ல. பலவித ஒலியியல் மாற்றங்களுக் கிடையிலும் பேசும்போது வரும் வேறுபாடுகளுக்கிடையிலும்

அர்த்தத்தை இருவர் புரிந்து கொள்ள ஸ்போட்டத்தின் மாறாத் தன்மை உதவுகிறது. அர்த்தம்பற்றி எழுந்த பிரச்சினைகளைத் தீர்க்க எழுந்ததுதான் 'ஸ்போட்டம்' என்று கூறப்படுகிறது. கால அளவையில் ரூபப்படும் சொற்களுக்கும் நிரந்தரமான அர்த்தத் திற்கும் உள்ள தொடர்ச்சியை வேறு வகையில் புரிந்து கொள்ள முடியாது. எனவே பல்வித ஒலி அமைப்புக்களுக்கும் உள்ளே ஒருமை கொண்ட ஏதாவது ஒன்று இருந்தால்தான் அர்த்தம் பற்றி விளக்கமுடியும். அதனால் 'ஸ்போட்டம்' பற்றிய சிந்தனை உருவானது. இது ஒரு விளக்கத்துக்குட்படாத சிந்தனைபோல் முன்வைக்கப்படுகிறது. ஸ்போட்டம் ஒலியிலிருந்து மாறுபட்டது போலவே ஒலியில்லாமலும் இல்லை. இந்த ஒலி, ஒலியன், சொல், வாக்கியம் என்று காணப்படக்கூடியது. ஸ்போட்டத்தின் ஒலி வெளிப்பாட்டுக்கு, பகுத்தல், வகைப்படுத்தல், அமைப்பாக்கல் (structure) எல்லாம் உண்டு; ஆனால் இதன் கருத்து வெளிப்பாட்டுக்குப் பிரித்தல், வகைப்படுத்தல் முதலிய பாகுபாட்டுத் தன்மை (analytical) இல்லை. பத்ருகிரி ஒரு சாதாரண உதாரணத்தின் மூலம் இதனை விளக்குகிறார். ஒரு மயில், முட்டையாய் இருக்கும்போது எப்படி மயிலின்தோகை முதலியன அதற்குள்ளே இருந்தனவோ அதுபோல் ஸ்போட்டம் ஒலிவடிவமாவதற்கு முன் பிரித்தல், வகைப்படுத்தலற்ற ஒன்றாய் இருக்கிறது. ஒலி வடிவமான, உடன் பிரித்தல் விளக்கப் படுத்தலுக்குட்பட்ட ஒன்றாய் அமைகிறது. பத்ருகிரி மூன்று நிலைமைகளைப் பிரித்து ஸ்போட்டம் இம் மூன்று நிலைகளின் அடுத்த கட்டம் என்கிறார்.

1. 'இதயம்' (pre-intellectual language)
2. 'மத்தியனம்' (Madhyana-language located in Buddhi)
3. 'வைகாரி' (Vaikhāri - the sequential, ordered arrangements of discrete units of language)

ஸ்போட்டம் பற்றிப் புகழ்பெற்ற இலக்கணப்புலவரான பாணினி வெளிப்படையாய்க் கூறாவிட்டாலும் அவர் அச்சிந்தனை உடையவர்களின் தாக்கத்திற்கு ஆளாகியிருக்க வேண்டும் என்பது அறிஞர் துணிபு. அதாவது சந்தி (புணர்ச்சி) பற்றிப் பாணினி கூறும்போது இச்சிந்தனையை அவர் அறிந்திருந்த தகவல் வருகிறது. இவ்வாறு ஸ்போட்டம்தான் அர்த்தத்தைத் தொனிப்பவனையும் (suggester) தொனியையும் (suggested) ஏற்படுத்துகிறது. ஸ்போட்டத் திற்கும் ஒலிக்கும் நடுவில் உறவு பற்றியும் பத்ருகிரி கூறுகிறார். ஸ்போட்டம் காரணமாகவும் ஒலி காரியமாகவும் இருக்கிறது. அதாவது மரங்கள் உராய்ந்து எழும் நெருப்பு, மரத்திற்குள் இருந்ததுதான் என்பது பத்ருகிரியின் விளக்கம். அர்த்தத்தைத்தரும்

ஸ்போட்டமும், ஒலியைத் தரும் ஸ்போட்டமும் ஒன்றோடு ஒன்று இணைந்தவையாகும்.

இவ்வாறான விளக்கத்தின் மூலம் சொல் என்பது அர்த்தத்தை வெளிப்படுத்தும் கருவியாகவும் (revealer) அதே நேரத்தில் அதுவே ஒரு வெளிப்படுத்தலாகவும் (காரியம் - revealed) உள்ளது. அக்னி என்ற சொல் பற்றிப் பாணினி கூறும்போது அச்சொல் தன்னையும் agni ś abdatva அக்னி எனும் சப்ததத்துவம் - அக்னி எனும் கிளவி) அக்னி என்ற உண்மையான 'நெருப்பையும் சுட்டுகிறது என்கிறார். அக்னி உதாரணத்தைத் தந்து விளக்குபவர் பாணினி (சூத்திரம் 4.2.33) ஆவர் என்பது கவனத்திற்குரியது.

இந்த இறுதி உதாரணம், ''பொருண்மைக்கும்'' ''சொன்மைக்கும்'' உள்ள தொடர்பும் ''ஸ்போட்டத்திற்கும்'' "ஒலிக்கும்" உள்ள தொடர்பும் ஒன்றுபோலுள்ளதை விளக்குகிறது. ஏனென்றால் அக்னி உதாரணமும் 'வந்தான்' என்பது பொருள் உணர்த்தியவாறும் 'கடியென்கிளவி' என்பது சொல்லுணர்த்திய வாறும் என்று பொருண்மை, சொன்மை பற்றிய விளக்கம்தரும் தமிழிலக்கணமரபும் ஒத்துப்போகின்றன.[3]

இங்குக் காட்டப்படும் ஒற்றுமை சந்தர்ப்ப வசத்தால் ஏற்பட்டதா அல்லது வடமொழி மரபு தொல்காப்பியத்தில் பல இடங்களில் காணப்படுவது போல் இதுவும் அப்படிப்பட்ட நேரடித் தொடர்பா என்ற கேள்வி வருகிறது. இங்குப் பத்ருகிரி கூறும் இன்னொரு கருத்தும்கூடக் கவனம் கொள்ளத்தக்கது. அதாவது 'சப்தம்' (ஒலி) எவற்றால் செய்யப்படுகிறதென்ற கேள்விக்குப் பத்ருகிரி பதில் தருகிறார். மூன்று வகையாக அப்பதில் அமைகிறது.

1. காற்றால் அமைகிறது
2. அணுவால் அமைகிறது
3. அறிவால் அமைகிறது.

தொல்காப்பியத்தின் பிறப்பியல் புறனடைச் சூத்திரம் ஒன்று 'அகத்தெழு வளியிசை. . .' என்று காற்றினால் ஒலி வருவதைக் கூறுகிறது.[4] எனவே தொடர்ந்து வேற்றுமொழிக் கருத்துக்கள் தொல்காப்பியத்தில் வருவதால் பொருண்மை, சொன்மை பற்றிய கருத்தும் வடமொழிச் சிந்தனையின் தொடர்பினால் உருவாகி யிருக்கலாம் என நினைக்க வழியுண்டு. ஏனெனில் பொருண்மை சொன்மை பற்றிய சிந்தனைகளைக் கூறும் தொல்காப்பிய

நூற்பாக்களைச் சேனாவரையர் பெயரியலுக்குப் பொருத்தமில்லாதவை என்று விவாதிக்கிறார்.

அடுத்த கேள்வி ஸ்போட்டம் பற்றிய ஆராய்ச்சியின் தொடர்ச்சியாக இந்தியாவில் வந்துள்ள சிந்தனை எப்படி பெர்டினன்ட் டி சசூர் வழி வெளிப்பட்டிருக்கிறதென்பது? இதுபோலவே ஸ்போட்டம் பற்றிய சிந்தனை விளக்கத்தைக் கூர்மையாகக் கவனிப்பவர்கள் சசூரின்' 'langue' என்ற (மொழிக் கிடங்கு) பற்றியும் நினைக்கத்தான் செய்வார்கள். இதைப் பின்னர்ப் பார்ப்போம். அதற்குமுன் ஸ்போட்டம் மற்றும் ஒலிவடிவமான சொல் இவைகளுக்கு நடுவில் உள்ள உறவு பற்றிய சிந்தனைகளைப் பொருண்மை, சொன்மை என்று தொல்காப்பியச் சிந்தனை வழி இணைக்கும்போது சில கருத்துக்கள் தோன்றுவதைப் பரிசீலிக்கலாம். அதாவது பொருள் வேறு பொருண்மை வேறு. அதுபோல் சொல் வேறு சொன்மைவேறு. ஆனால் பொருண்மை பொருளாக எடுக்கப்பட்டுவிட்டதைத் தொல்காப்பியத்தின் பெயரியல் மூன்றாம் சூத்திரம் விளக்குகிறது. (பெயரியல் 2ஆம் சூத்திரம்தான் பொருண்மை, சொன்மை பற்றிக் குறிப்பிடும் ஒரே இடம்). பத்ருகிரியின் சிந்தனைகளின் வெளிச்சத்தில் பார்க்கும்போது பொருண்மை என்பது ஸ்போட்டத்தின் தன்மை கொண்டிருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. அதுபோல் சொன்மை என்பதும் சப்த (sabda) என்ற ஒலிவெளிப்பாட்டுச் சொல் என்றே யூகிக்க வாய்ப்பிருக்கிறது. தொல்காப்பியத்தின் சூத்திரங்களின் ஒழுங்கின்மை பற்றியும் இரு தொல்காப்பியர் அல்லது மூன்று, நான்கு தொல்காப்பியர்கள் இருந்திருக்கலாம் என்ற கருத்துக்களும் இங்கு ஒரு முறை நினைவுக்கு வந்தால் வடமொழிக் கருத்துடைய இச்சூத்திரம் இடையில் வந்து சேர்ந்திருக்கும் வாய்ப்புப் பற்றியும் நினைக்க முடியும். பெயரியல் அதிகாரத்தில் பொருண்மையையும் சொன்மையையும் வேறுபடுத்தி விட்டு[5] அவை இரண்டும் சொல்லின் பிரிவுகள் என்று கூறிவிட்டு அடுத்ததற்கும் அடுத்த சூத்திரத்தில் மீண்டும் (4ஆம் சூத்திரம்) சொல் எனப்படுவது பெயரே வினையென்று ஆயிரண்டென்ப அறிந்திசினோரே" என்பது சரியில்லை. சொன்மை, சொல்லாகி விடுகிறது : எனவே ஏதோ குழப்பம் இந்த இடத்தில் தொல்காப்பியத்தில் நடந்துள்ளது எனத் தெரிகிறது. பிற்காலத்தில் வந்த இலக்கணங்களான நன்னூல் முதலியன சொன்மையைச் சொல் என்றே கருதி வந்து விட்டன. எனவே தமிழ் சர்ச்சைகளின் இயல்பான ஓட்டத்தில் இந்தப் பொருண்மை, சொன்மை விஷயங்கள் அமையவில்லையே என்றும் கேட்கத் தோன்றுகிறது.

எது எப்படியிருந்தாலும் மொழிக்கும் அர்த்தத்திற்கும் இடையில் உள்ள தொடர்பு இங்கு விளங்குகிறது. அதாவது 'வீடு' என்ற ஒலி எழுந்தவுடன் கேட்பவன் மனதில் மனிதர் வசிக்கும் இடம் என்ற மனப்படிமம் தோன்றுகிறது. ஒலிக்கும் இந்த மனப்படிமம் தோன்றுவதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை; இவை இரண்டுக்கும் உள்ள உறவு இடுகுறியனது என்பது பெர்டினன்ட் டி சசூர் கருத்து. 'மொழிப்பொருள் காரணம் விழிப்பத்தோன்றாது' என்ற தொல்காப்பியரின் சூத்திரத்திற்குத் தெய்வச்சிலையார் கூட இந்த இடுகுறி என்ற சிந்தனையையே முன் வைக்கிறார். வேறு உரையாசிரியர்கள் தொன்று தொட்டு வழங்கி வருதல், என்று வரலாற்றின் மீது காரணத்தைச் சுமத்துகிறார்கள். ஆனால் இந்த இடத்தில் ஸ்போட்டம் என்பது பெர்டினன்ட் கூட சசூர், தெய்வச்சிலையார், சேனாவரையர் ஆகியோரின் கருத்துக்களைத் தாண்டிய ஒரு சிந்தனையாகப்படுகிறது. ஆனால் ஸ்போட்டம் மொழியுடனும் (ஒலி) மொழியிலிருந்து வேறுபட்டும் நிற்கிறதென்று அதனைப்பற்றிய விளக்கங்கள் சுட்டுவதை மறப்பதற்கில்லை. அப்படியானால் பொருண்மை எப்படிப் பட்டதென்ற கேள்வி வரும். இக்கேள்விக்குப் பதிலைக் கூறுமுன் சில விளக்கங்கள் முன்வைக்கப்படுவது தேவை. இவை இந்திய அளவில் தேவைப்படும் விளக்கங்கள்.

சமஸ்கிருதச் சிந்தனைகள் இந்தியாவின் மக்கள் மொழிகளில் பல்வேறு முறைமைகளில் பாதிப்புச் செலுத்துகின்றன. சமஸ்கிருதமொழி சமஸ்கிருதச் சிந்தனை என்று இப்பாதிப்பு வட்டார மொழிகளுக்கு வரும்போது சிலவேளை அப்படியே வரும்; சிலவேளை மாற்றமுற்றுவரும்; சிலவேளை வட்டார மொழியின் குணப்படி வரும். இந்த மூன்று வகை மாற்றங்களைப் பொதுவாய்க் குறிப்பிடுகிறார்கள். பொருண்மை சொல்லளவில் வேறுபட்டிருந்தாலும் பொருள் அளவில் ஒற்றுமை காட்டுகிறது. ஆனால் நேரடியாக ஸ்போட்டமும் பொருண்மையும் ஒன்றா என்ற கேள்விக்குப் பதில் சொல்ல ஆதாரங்கள் இல்லை. பொருளும் பொருண்மையும் ஒன்று என்று கூறுவதற்குச் சூழ்நிலை இடம் கொடுக்கிறது. அப்படியென்றால் 'பொருள்' என்று கூறாமல் 'பொருண்மை' என்று ஏன் கூற வேண்டும் என்று கேட்டால் பதில் இல்லை. இந்தப் பிரச்சினையை இங்கே இப்படியே விட்டு விடலாம்.

இவ்வளவு நேரமும் ஸ்போட்டம் பற்றியும் அதனோடு சம்பந்தமுள்ள தமிழ்ச் சிந்தனை பற்றியும் இவ்விரண்டினோடும் தொடர்புடைய பெர்டினன்ட் டி சசூர் சிந்தனை பற்றியும் நாம் எதற்காகப் பார்த்து வருகிறோம் என்ற விஷயத்துக்கு வரவேண்டும்.

சொல்லாடல் அல்லது Discourse பற்றிச் சமீபகாலங்களில் மேற்கிலும் தமிழிலும் பேசப்பட்டு வருகிறது. கருத்தாடல் என்று இதனைச் சிலர் கூறுகின்றனர். பழைய சிந்தனைக்கு இச் சொல் பிரயோகம் இட்டுச் செல்லுமென்பதால் சொல்லாடல் என்ற புதுச்சொல்லாக்கம் (Neologism) ஏற்புடையது என்று கருதி அச் சொல்லையே இங்குப் பயன்படுத்துவோம். எனவே சொல்லாடல் சார்ந்த சிந்தனைகளுக்கும் ஸ்போட்டம், பொருண்மை போன்ற சொற்கள் மூலம் உருவாகும் சிந்தனைகளுக்கும் தொடர்பிருக்கிறது.

இனி, சொல்லாடல் பற்றிய அடிப்படை விளக்கங்களுக்குச் செல்வோம். அதற்கு வழிவகுக்குமுகமாகப் பெர்டினன்ட் டி சசூரின் "லாங்க" (langue) மற்றும் "பரோல்" (parole) என்ற மொழிக்கிடங்கு, பேச்சு என்ற இரண்டு கருத்தாக்கங்களுக்கு வரவேண்டும். தமிழில் பல சூழ்நிலைகளில் அறிமுகப்படுத்தப்பட்ட இவ்விரு கருத்தாக்கங் களில் "லாங்க்" என்ற 'மொழிக்கிடங்கு' பற்றிச் சொல்லாடல் பற்றி விளக்க வருகிறவர்கள் கரிசனம் காட்டுகிறார்கள். 'மொழிக் கிடங்கும்' நேரடியான மொழிக்கு மட்டுமே உரிய கருத்தாக்கமல் அதாவது மொழியியல் வகையை மட்டுமே (linguistic fact) அல்ல. மொழியின் சமூகப்பரிமாணம் இந்த மொழிக்கிடங்கு. அதன் பின்னணியில்லாவிட்டால் ஒரு நபரின் பேச்சில் எங்கிருந்தோ சொற்களும், கருத்துக்களும், வாக்கியக்கோர்வையும் அமையாது. அப்படியானால் 'ஸ்போட்டம்' என்ற பத்ருகிரியின் சிந்தனைக்குள் 'மொழிக்கிடங்கின்' (லாங்க்) அம்சங்களும் 'பேச்சின்' (பரோல்) அம்சங்களும் கலந்துள்ளன என்று கூறலாமா என்ற கேள்வி எழும்புகிறது. அதுபோலவே 'பொருண்மை'ச் சிந்தனையைச் சமஸ்கிருதப் போராட்டச் சிந்தனையிலிருந்து வடிவமைத்துக் கொண்ட (தொல்காப்பியர்) அல்லது யாரோ ஒருவர், (அப்படித் தான் என்றால்) தன் வடிவமைப்பின் மூலம் சில செயல்களைச் செய்துள்ளதும் கவனம் கொள்ளத்தக்கது. வடிவமைப்பின் மூலம் ஸ்போட்டச் சிந்தனையின் 'இதயம்' என்பது போன்ற மொழி-முன் (pre-linguistic) பிராந்தியத்தை நிராகரித்துள்ளார்; அதிகஃமான உளவியல் அம்சங்களைப் புறமொதுக்கியுள்ளார்; அதுபோல் 'பொருண்மை'யை மொழிவயப்படுத்தி அதன் ஒரு பாகமான அதாவது தேவைக்கேற்பக் குறைத்துப் 'பொருள்' (Semantic polatization) வயப்படுத்திப் புரிந்து கொள்ள முயன்றுள்ளார்.

லாங்க் அல்லது மொழிக்கிடங்கின் செயல்பாடுகளோடு சொற்பொருளனியலை (Semantic) இணைக்கும் சிந்தனைமுறை அனைத்துலக ரீதியிலும் உள்ளது. உதாரணமாக, மொழி, சொற்பொருளனியல் மற்றும் கருத்துருவம் (Language, Semantics

and Ideology) என்ற நூலை எழுதியுள்ள மிஷேல் பெஷே (Michel Pecheux) என்பவரின் முயற்சியைச் சுட்ட வேண்டும். இவர் மொழிக்கிடங்குபற்றிய ஆராய்ச்சியை முன்னெடுத்துச் செல்கிறார். அதனால் மொழிக்கிடங்கு, ஒருவன்/ஒருத்தி பேசும் மொழியின் பின்னமைந்துள்ள மொழிவிதித் தொகுப்பு என்றால் அதில் வரலாறு இருக்குமா என்ற கேள்வியை எழுப்புகிறார். சசூர் அவர்களே மொழிக்கிடங்கில் சமூகப் பரிமாணம் உண்டு என்று கூறுவதால் வரலாறு உண்டா என்ற கேள்வி நியாயமானதாகும். பதிலை மிஷேல் பெஷே கூறிவிடுகிறார்:

1. லாங்க் என்னும் மொழிக்கிடங்கு வரலாற்றுத் தன்மை உடையதல்ல. ஏனென்றால் இது ஒரு அமைப்பு (system) ;
2. லாங்க் ஒரு அமைப்பாக இருக்கும் காரணத்தால் இது மொழியியலின் கோட்பாட்டுக்குட்பட்டது (theoretical object of linguistics).

எனவே அமைப்பு என்பது வரலாற்றுக்கு எதிரானது என்று அறிகிறோம். அதாவது விளக்கமுடிந்த ஒன்று (அமைப்பு) விளக்க முடியாத ஒன்றுக்கு (வரலாறு) எதிராக அமைந்திருப்பது புரிகிறது.

இச்சிந்தனையுடன் தொடர்புடைய இன்னொரு விவாதத் திற்குச் செல்வோம். அது மிஷேல் ஃபூக்கோ (Michel Foucault) வுடைய 'அறிவின் புதைபொருளியல்' (The Archaeology of knowledge) என்ற நூலில் வரும் சிந்தனையாகும். அதாவது எல்லாவற்றின் அடியோட்டமாக அல்லது அடிப்படையாக ஒரு தொடர்ச்சியும், ஒருமை (unity)யும் இருக்கிறது என மனிதகுலம் நம்புகிறது. இதுதான் வரலாறு என்றும் நம்பப்படுகிறது. இந்தத் தொடர்ச்சியும் ஒருமையும் கேள்விக்குட்படுத்தப்படும்போது இவைகளுக்கு மாறான சொல்லால் (statement) என்பதை வந்தடைகிறோம். சொல்லல் ஒரு நிகழ்வு (event) என்கிறார் பூக்கோ. இவ்வாறு தொடர்ச்சியும் ஒருமையும் முன் வைக்கும் மனித மனத்தியல்பு வரலாற்றைக் காட்டுகிறதென்றால் பின்னர்க் கூறிய சொல்லல், வரலாற்றுக்கு எதிரானது. அதாவது தொடர்ச்சியைக் கேள்விக்குட்படுத்தும் ஒன்று. காலத்தன்மைக்கு மாறான தளத்தன்மை. அது சொல்லல் அல்லது நிகழ்வு. இவ்வாறு மிஷேல் பெஷெயும் மிஷேல் பூக்கோவும் ஓரளவு ஒத்த தன்மைகளை விளக்குகிறார்கள். அதாவது உறுதியான அமைப்புக்கும் விளக்க முடியாத வரலாற்றுக்கும் மாற்றாக ஒரு கருத்தாக்கம் வேண்டி யிருக்கிறது. அதுதான் இரண்டின் - அமைப்பின் (அல்லது சொல்லின்) மாறாத்தன்மையும் வரலாற்றின் (தொடர்ச்சியின்)

மாறும் தன்மையும் கொண்ட சொல்லாடல் (Discourse) என்பது. இவ்விருவரின் சிந்தனைகளும் மேற்குறிப்பிட்ட நூல்களில் ஒத்துப்போகிற பகுதிகளை மட்டும் இங்கே பார்த்தோம். பின்பகுதி நூல்களில் இருவரும் மாறும் இடம் இங்கு முக்கியமில்லை.

இவ்வாறு நம்மால் அடையாளப் படுத்தப்படும் சொல்லாடல் ஆரம்பத்தில் நாம் பார்த்த ஸ்போட்டத்தைப் போலவும் பொருண்மையைப் போலவும் மொழி செயல்படும் மனப்பிராந்தியத்திற்கும் அது செயல்படா மனப்பிராந்தியத்திற்கும் இடையில் இனம் காணத்தக்கது எனலாம். இதனை வெளிப் படையாகவே கூறிவிடுகிறார் மிஷேல் ஃபூக்கோ. இவர் தனது பொருள்களின் ஒழுங்கு (The Order of things) என்ற நூலில் இப்படிக் கூறுகிறார் :

> சொல்லாடல்கள் குறிகளால் (Signs) உருவானவை. எனினும் குறிகளால் விஷயங்களைக் குறிப்பதைவிட அதிகம் பணி சொல்லாடல்களுக்கு உண்டு. இந்த 'அதிகம்' என்பதுதான் சொல்லாடல்களை மொழி யாகவோ (லாங்க்) பேச்சாகவோ (பரோல்) குறுக்குவது இல்லை. இந்த 'அதிகம்' என்பதைத்தான் நாம் வெளியில் கொண்டு வரவும் விளக்கவும் செய்ய வேண்டும்[6]

ஏறத்தாழ இதே கருத்தைத்தான் மொழியியல் அறிஞர் பென்வினிஸ்த் (Benveniste) அவர்களும் கூறுகிறார்கள்:

> ஒலிகள், பொருளன்கள், வார்த்தைகள் ஆகியன வற்றிற்கு மொழி அளவில் செயல்பாடுண்டு. இன்னொரு தளம் உண்டு, அதுதான் சொல்லாடல்[7]

இது மொழியியல் துறையாளர் ஒருவரின் கருத்து. இலக்கியத்துறை நூல் எழுதிய ஒருவர் சொல்லாடல் பற்றி என்ன கூறுகிறார் என்று காண்பது பயன் தரும்.

> சேக்ஸ்பியரின் 73ஆம் சானட் கவிதை 4 வாக்கியங்கள் கொண்டது. ஒவ்வொரு வாக்கியமும் தற்கால ஆங்கிலத்தில் வரும் வாக்கியம். ஆனால் இந்த நான்கு வாக்கியங்களுக்கும் மத்தியில் ஒரு ஒத்தபண்பு (cohesion) உண்டு. இந்த ஒத்த பண்பு தான் சொல்லாடலின் பிராந்தியம்.[8]

இலக்கியத்துறை சார்ந்த ஈஸ்தோப் என்பரின் சிந்தனையில் சொல்லாடல் சற்று மாறுபட்ட பண்பை உள்ளடக்க ஆரம்பிக்கிறது.

இதுவரை அறிமுகப்படுத்தாத இன்னொரு புத்தகம் "சொல்லாடலின் கோட்பாடுகள்" (Theories of Discourse) என்பது. எழுதியவர் டயனெ மாக்டொனால் என்பவர்.

இவர் சொல்லாடலுக்கு உரையாடல் குணம் இருக்க வேண்டும் என்றும் நாடுகளுக்கு ஏற்பச் சொல்லாடல் மாறுபடும் என்றும் கூறுகிறார். மேலும் எந்தெந்த நிறுவனங்களும் சமூகச் செயல்களும் சொல்லடலை உருச் சமைக்கிறதோ அதற்கேற்ப இது மாறிவரும் என்பது டயனெ மாக்டொனால் கருத்து. அதாவது மருத்துவமனையின் சொல்லாடலில் மருத்துவருடையது வேறு நோயாளியின் சொல்லாடல் வேறு. எனவேதான் ஃபூக்கோ மனநோய் மருத்துவமனை (asylum) மற்றும் சிகிச்சையகம் (clinic) பற்றிக் கவனம் செலுத்தினார். சொல்லாடல் என்பது உற்பத்தி உறவுடன் நேரடித் தொடர்புடைய கருத்துருவங்களிலிருந்து மாறுபட்டது.[9] என்றாலும் போராட்டத்தில் இனம் காணத்தக்கதே இந்தச் சொல்லாடல் என்பார் ஃபூக்கோ.[10] ஃபூக்கோ பின்காலக்கட்ட ஆய்வுகளில் சொல்லாடலுக்கும் அதிகாரத்திற்கும் தொடர்பு உண்டென்றார். அதுபோல் ஆசை (Desire) என்பது பற்றி ஆயும்போது அதன் அமைப்பாக்கம் சொல்லாடலால் காணப்படும் என்கிறார்.

இவ்வாறு விளக்கப்படும் சொல்லாடலை நாம் ஆரம்பத்தில் பார்த்தது போல் நிலைமாறாத ஒன்றாகவும் நிலைமாறிய ஒன்றாகவும் அணுக முடியும். சொல்லாடலின் இந்த மாறாநிலை நவீன மொழியியல் அமைப்புக்குக் கொடுக்கும் முக்கியத் துவத்திலிருந்து வந்தது. மாறிய நிலையைச் சிலர் வரலாற்றிலிருந்து இனம் காண்கின்றனர். வேறு சிலர் மொழியியலுக்குள்ளேயே உள்ள சில கருத்தாக்கங்களில் காணப்படும் நீக்குபோக்கான-அதாவது அமைப்பு அளவு கறார்த்தன்மையற்ற- கருத்தாக்கங்களில் காண்கின்றனர். எனவே முற்றிலும் மொழியியலில் இருந்து சொல்லாடல் விடுபட்டுவிடவில்லை என்றறிகிறோம்.

மொழியியலின் மாறாநிலைத்தன்மை அல்லது அமைப்புகள் தன்மை சொல்லாடலுக்கு உள்ள பலவித குணங்களில் ஒன்றாய் உள்ளதை விளக்கச் சில பார்வைகள் உதவுகின்றன. அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

இலக்கியத் தொடர்புடைய முறையில் சொல்லாடலை அறிய முயலும் ஈ ஸ்தோப் சொல்லாடலின் இறுக்கமான குணாம்சங்களை வெளிப்படுத்துகிறார். இலக்கியம் எல்லா இறக்கங்களுக்கும் எதிரானது. எனவே அத்தகைய இலக்கியத்தை

அடிப்படையாய் வைத்துச் சொல்லாடலை விளக்கும் ஈ ஸ்தோப் சொல்லாடலுக்கு மூன்று மாறாநிலைக் குணங்கள் இருப்பதாய்க் கூறுகிறார்.

1. சொல்லாடல் ஒரு வாக்கியத்தைப் போலவோ, செஸ் விளையாட்டைப் போலவோ சில விதிகளால் கட்டுப் படுத்தப்பட்டது.

2. சொல்லாடல் மொழியைப்போலவே தொடர்புறுத்தும் பண்பு (communication) கொண்டது.

3. சொல்லாடலுக்கு ஒரு பொருள் முதல் தன்மை (Materiality) உண்டு. ஏனென்றால் சசூருக்குக் குறிப்பான் (Signifier) என்ற உறுதியான விதிகளுக்குட்பட்ட அமைப்பே மொழிக்கு அடிப்படையாய் உள்ளது. டெரிதாவுக்கு வடிவத்தன்மை (graphemic) முக்கியம்.

இந்த இறுகிய பண்புகளுடன் இறுகாநிலைகளையும் கூடவே ஈ ஸ்தோப் கூறுகிறார். அவை இந்த இறுகல் நிலைகளுடன் தொடர்புடையவையாய் வருவதால் இங்குக் கூறுவதில் தவறு இல்லை.

1. சொல்லாடல் கறார்த்தன்மை உடையதாய் இருப்பதால் அது அறிவைக் கொடுக்கிறது. அந்த அறிவு எந்த நிறுவனத் திலிருந்தோ, பொருளிலிருந்தோ வருகிறதோ அதன் பொருள் பண்பால் தாக்கம் பெற்று அறிவுக்கு ஒரு கறார்த் தன்மை (accuracy) கொடுக்கிறது. கறார்த் தன்மையும் கறாரற்ற தன்மையும் பிணைகின்றன.

2. ஒரு கவிதைச் சொல்லாடலில் ஒரு தன்னிலை கட்டமைக்கப் படுகிறது. அது கவிதை வாசகனின் நிலையிலிருந்து தீர்மானிக்கப்படுகிறது.

3. சொல்லாடல், வரலாற்றின், சமூகத்தின் எந்தச் சூழலில் இருந்து உருவாகிறதோ அச்சூழலைத் தன் குணத்திற்குட் படுத்திக் கட்டமைக்கிறது. எனவே பிரதி (கவிதை என்றால்) திறந்ததாகிறது. மூடியதில்லை.

இவ்விஷயங்களைத் தன்பாணியில் விளக்கும் மிஷேல் ஃபூக்கோ.

1. சொல்லாடல் விதிகள் முன்தீர்மானிக்கப்பட்டவை (apriori) என்றும்

2. அது சட்டதிட்ட பண்பு (discourse belongs to the order of laws) கொண்டது என்றும் கூறுகிறார். எனவே சொல்லாடல்

தன்னைவிட்டு வெளியில் போய் ஒருவர் பேசுவதை முடியாததாக்குகிறது என்கிறார் ஃபூக்கோ.[11]

இறுதியாகத் தொல்காப்பியத்தின் செய்யுளியலுக்கும் இதுவரை பார்த்த சொல்லாடல் சிந்தனைகளுக்கும் உள்ள தொடர்பைத் தொட்டுவிட்டு இக்கட்டுரை முடிகிறது.

முதலில் செய்யுளியல் என்பது பிற்காலத்தில் யாப்பியல் என்று சுருக்கப்பட்டுவிட்டது என்ற சிந்தனைக்கு வரவேண்டும். செய்யுளியலில் தொல்காப்பியர் கூறும் கூற்று, களன், மரபு போன்றவைகளையும் இவை எல்லாவற்றிலும் மாறுபட்ட தமிழ்வகை அழகியல் அடிப்படையை முன்வைக்கும் முன்னம்[12] மற்றும் நோக்கு இவை எல்லாம் கண்ணுறும் போது செய்யுளின் சொல்லாடல் தொடும் மொழிக்கும் பொருள் உலகம் வரலாறு, நிறுவனம் ஆகியவைகளுக்கும் உள்ள தொடர்பை எதிர்நோக்கியிருக்கிறது என்று கூறுவதில் தவறில்லை. ஆனால் சொல்லாடல் பற்றிய இன்றைய முழுச்சிந்தனை வீச்சும் செய்யுளியலில் இருப்பதாகக் கூறமுடியாது. ஆனால் செய்யுளியலை ஒரு மறு ஆய்வு செய்து மேற்கத்திய சிந்தனைகளையும் ஆய்வுக்குட்படுத்தித் தமிழ்ப்பண்பு கொண்ட சொல்லாடல் ஒன்றினை வடிவப் படுத்த முடியும். அது பெரிய, ஆழமான கூட்டு நிலை ஆராய்ச்சியாக அமையும். இவைகளைப் பற்றிய விரிவான ஆரம்ப சித்திரிப்பு இன்னொரு கட்டுரையில் அக்கட்டுரை பொருண்மை மற்றும் சொன்மை பற்றிய பெயரியல் நூற்பாவின் கருத்து தொல்காப்பியச் சிந்தனா கட்டுமானத்தின் உள்ளுறை நிலையிலாவது அமைகிறதா என்றும் அப்படி அமைகிறதென்றால் எவ்வெவ் பகுதிகளில் அமைகிறது அல்லது அமையப் பின்னணியை அமைக்கிறது என்றும் ஆய ஏது உண்டாகும் என்று கருதலாம்.

## குறிப்புகள்

1. ஆனந்தவர்த்தனரின் தொனி வேறு.
2. பத்ருகிரி தொடர்பான இக்கட்டுரைக் கருத்துக்கள் Structure of Signification Vol.II என்னும் நூலிலிருந்து.
3. புலியூர்க்கேசிகன், தொல்காப்பிய உரை, 1967.
4. எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து
அகத்தெழு வளியிசை அரில்தப காடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே -பிறப்பியல்-புறனடை_20.

5. பெயரியலில் முதல் சூத்திரம்,

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"

என்றும், இரண்டாம் சூத்திரம்,

"பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர்"

என்றும், மூன்றாம் சூத்திரம்,

"தெரிபுவேறு நிலையலும் குறிப்பில் தோன்றலும்
இருபாற்று என்ப பொருண்மை நிலையே"

என்றும், 4ஆம் சூத்திரம்,

"சொல் எனப்படுப பெயரே வினையென்று
ஆயிரண்டென்ப அறிந்திசி னோரே"

என்றும் அமைகின்றன.

6. இச்சிந்தனையின் விளக்கத்திற்குப் பார்க்க : தமிழவன், தமிழும் குறியியலும், 1999.

.........discourse are composed of signs; but what they do is more than use these signs to designate things. It is this more-that renders them irreducible to language (lang) and to speech (parole). It is this 'more' that we must reveal and describe. - The Order of things.

7. Benvimiste.

8. Antony Easthope, Poetry as Discourse, 1983, p.8.

9. இது தொடர்பான சிந்தனைக்கு : தமிழவன், ஸ்ட்ரக்சுரலிசம், 1982.

10. ஃபூக்கோ, Untying the Text, p.11.

11. Michel Foreaults, The Order of Discourse, in Untying the Text, pp. 48 -51.

12. தமிழவன், "தமிழ்க்கவிதையும் மொழிதல் கோட்பாடும்"

# நச்சினார்க்கினியரின் குறியியல்

தமிழ் மக்கள் அகம் என்றும் புறம் என்றும் இரண்டு வார்த்தைகளைப் பற்றி அடிக்கடி பேசுகிறார்கள். தமிழறிஞர்கள் என்று அறியப்படுபவர்களும் இரண்டு வார்த்தைகளையும் பயன்படுத்தாமல் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசுவதில்லை. தமிழிலக்கியத்திலும் அன்றும் இன்றும் இந்த வார்த்தைகளுக்கென்று ஒருதனி 'மவுசு' இருந்து வருகிறது. ஆனால் புது விளக்கங்களுக்கு வரும் கட்டுரைகள் மிகச் சில.[1]

எனவே இந்த அகம், புறம் என்ற வார்த்தைகளைப் பற்றி யோசிக்க வேண்டும். இந்த வார்த்தைகள் உண்மையில் என்ன அர்த்தம் கொண்டவை என்று பார்க்கவேண்டும். இவ்வாராய்ச்சி தமிழர்கள் மற்றும் அவர்கள் இலக்கியம் பற்றிய நம் அறிதலையும் விசாலப்படுத்த உதவும் என்பது என் நம்பிக்கை.

*அகம்/புறம் பற்றிய மானுடவியல் பின்னணி*

இந்தச் சந்தர்ப்பத்தில் நான் எழுதிய ஒரு கட்டுரையைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். எமில் தர்க்கைம்[2] என்பவர் உலக ஆதிவாசி, மற்றும் வளர்ந்த சமூகங்கள் மத்தியில் உள்ள பிரித்தறியும் சிந்தனை (classification) பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்டுள்ளார். அந்தச் சிந்தனையை அடிப்படையாய் வைத்துத் தமிழர்களின் அகம் புறம் சிந்தனைகூட தர்க்கை மின் சிந்தனையோடு சேர்த்துப் பார்க்கத்தக்கது என்று நான் எழுதிய கட்டுரை அது. ஆதிவாசி சமூகங்கள் மத்தியில் கிளை (clan) மற்றும் உபகிளை (mioties) பற்றிய ஒரு சமூகப்பிரிவு உண்டு. அதற்கு நிகரான சிந்தனா முறைப் பிரிவுதான். பூக்களையும் காற்றையும் பறவையையும் நீரையும் மனிதரையும் அந்த ஆதிவாசி பிரிப்பதற்கான அடிப்படை என்பது தர்க்கைமின் எண்ணம். சமூக உண்மையிலிருந்து உருவாகி வந்ததுதான் சிந்தனா உண்மை என்ற நேரான தொடர்புபடுத்தலை மானுடவியல்காரர்கள் இன்று ஏற்பதில்லை என்றாலும் தர்க்கைமின் இந்தப் புஸ்தகம் மிகுந்த முக்கியத்துவம் கொண்டதாகச் சமீபத்திய அமைப்பியல் மானுடவியலார்களால் சுட்டிக் காட்டப்பட்டதை மாற்ற முடியாது. நானும் தர்க்கைமின் வழியைப் பின்பற்றி அகம், புறம் பாகுபாடு

ஒருவிதச் சமூகப் பாகுபாட்டைப் பிரதிபலிக்கிறதென்று அக் கட்டுரையில் எழுதினேன். இன்று இது ஒரு யூகம் என்று மட்டுமே நான் கூறமுடியும். ஏனென்றால் பண்டைத் தமிழ்ச்சமூகம் பற்றிய எந்தத் தகவலும் நமக்கு இல்லை. எனவே இது ஒப்பியல் அடிப்படையான ஒரு யூகம் என்று மட்டும் கூறமுடியும். அப்படிக் கூறும் போது அகம் புறம் என்ற பெயர்கள் ஏதோ ஒரு வகையில் தமிழர்களிடம் அன்று இருந்த வானசாஸ்திரம் சம்பந்தமானதோ அல்லது கணித சங்கேதம் சம்பந்தமானதோ ஆன யாதோ ஒரு பிரிவு முறையைச் சுட்டும் காலம் கடந்த பெயர்கள் என்று அறிய முடிகிறது. இது தொல்காப்பியரால் அகத்திணை புறத்திணை என்று பயன்படுத்தப்பட்ட பிறகுதான் நமக்கு இந்தப் பிரிவு முறை பற்றித் தெரிந்தது. தெரிந்தாலும் நம்மிடமும் இன்று ஒத்த எண்ணம் இல்லை. சில ஆய்வாளர்கள் இந்தப் பிரிவுமுறை தமிழர்களின் வாழ்க்கையிலுள்ள பிரிவுமுறை என்கிறார்கள். வேறு சிலர் இல்லை இல்லை இது கவிதையைப் பிரிக்கும் பிரிவுமுறை என்றார்கள். வேறு பதில் தெரியாததால் இந்த இருவிதச் சிந்தனையும் சந்தேகத்தோடு அவ்வப்போது சிலரால் சொல்லப்பட்டாலும் அப்படிச் சொல்பவர்களுக்கும் போதிய சான்றுகளும் ஆதாரங்களும் இல்லை.

### நச்சினார்க்கினியரும் அகம், புறம் என்னும் வார்த்தைகளும்

இனி நேராக விஷயத்திற்கு வருவோம். இன்று வாழும் நம்மையெல்லாம் விட அதிகக் காலத்திற்கு முன்னாலேயே அகம், புறம் பற்றி அறிந்தவரும் தமிழ்ப் புத்தகங்கள் சுமார் 83-ஐப் படித்துப் புரிந்தவர் என்று உ.வே. சாமிநாதையரால் சொல்லப்பட்டவரும்[3] சமஸ்கிருத நூல் அறிவு உடையவருமான நச்சினார்க்கினியர் அகம், புறம் பற்றி என்ன நினைத்திருக்கிறார் என்று அறிய நமக்கு நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன. இவர் தொல்காப்பியம் மற்றும் பத்துப் பாட்டு. சீவகசிந்தாமணி, கலித்தொகை என்று பல தமிழ் நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். அந்த உரைகளை "வாசித்தால்" இவர் அகம், புறம் பற்றி என்ன எண்ணம் கொண்டிருந்தார் என்று புரிய முடியும்.

### வாசித்தல் என்பது என்ன?

**இங்கு "வாசித்தல்" என்ற வார்த்தையையும் கொஞ்சம் விளக்கவேண்டும். வாசித்தல் செய்ய வேண்டுமென்றால் நம்கண் முன் சில 'எழுத்துக்கள்' இருக்க வேண்டும். அதன்பிறகு வாசிக்க ஒரு ஆள்வேண்டும். மூன்றாவது அந்த எழுத்திலிருந்து அர்த்தம் காண ஒரு யுக்தி (Strategy) யை அந்த வாசகன் வைத்திருப்பான். இந்த மூன்று அம்சங்களும் இருந்தால் 'வாசித்தல்' நடைபெறும்.**

இப்போது வாசிக்கத் தேவைப்படும் 'எழுத்து' என்பது ஒரு சிந்தனையைக் கொண்ட அடையாளம் என்பது புரியும். ஆகையால் எந்த அடையாளமும் வாசிக்கத்தக்கது என்பது விளங்குகிறது. எனவே எழுத்து என்பது ஒரு வித அடையாளம் என்ற சிந்தனை நமக்குக் கிடைக்கிறது. எனவே புகைவண்டி நிலையக் கைகாட்டி முதல் ஹோட்டல் மெனு கார்ட் வரை வாசிக்க முடியும் என்கிறார்கள் இச் சிந்தனையாளர்கள்.

மேலே நாம் எமில் தர்கைம் என்ற பிரஞ்சு நாட்டுச் சமூகவியல் மேதை ஒருவரைப் பார்த்தோம். அதே மரபில் வந்து புதிய சிந்தனை வீச்சுக்களுக்குச் சென்றவராகக் கருதப்படும் லெவி ஸ்ட்ராஸ் என்ற அதே நாட்டுச் சிந்தனையாளர் சொன்ன ஒரு விஷயம் நமக்கு மிக முக்கியம்.

அவர், எல்லாவித அடையாளங்களுக்கும் உள்ளே, சற்று மேல் தோலை நீக்கிப் பார்த்தால் நமக்குத் தெரியாதவிதமாய் ஒளிந்துகொண்டு ஒரு இருமை எதிர்வுப் பண்பு உண்டு[4] என்று சொல்கிறார். அதாவது சமூகத்தில் உள்ள அடையாளங்கள் என்பது சமூகத்தின் எழுத்து (மொழி) என்று அர்த்தம். மொழிக்கு அர்த்தம் கிடைக்க அடிப்படை இருமை-எதிர்வு என்று மொழியியல் வாதிகள் சொன்னதால் சமூகத்தின் அடையாளங்களும் மொழிதானே; அப்படியெனில் அந்த மொழிக்கும் அர்த்தம் கிடைக்க இருமை எதிர்வு இருக்கும் என்று எண்ணினார் லெவி ஸ்ட்ராஸ். பிறகு இந்த யூகத்தை ஆதி சமூக மக்களின் உறவுமுறையைஆய்ந்து நிரூபிக்க முடியும் என்று சொன்னது லெவி ஸ்ட்ராசுக்கு உலகப்புகழைப் பெற்றுத் தந்தது.[5]

சரி, நான் ஏன் லெவி ஸ்ட்ராஸ் பற்றி எல்லாம் கூறுகிறேன் என்று சொல்லுகிறேன்.

அகம், புறம் என்ற சிந்தனையில் ஒரு எதிர்வுப் பண்பு இருக்கிறது என்று நினைவில்லாமலே நாம் நம்பிவந்துள்ளதுமின்றி, நச்சினார்க்கினியர் அகங்கையும் புறங்கையும் போல அகமும் புறமும் அமைந்துள்ளன[6] என்று கூறுவதும் முக்கியமானது. இந்த இருமை-எதிர்வு தமிழ்ச் சிந்தனையில் காலந்தோறும் கடைப்பிடிக்கப்பட்ட நம் அகம் புறத்தில் இருக்கிறதென்றால் இது சிந்திக்கத்தக்க ஒன்றல்லவா? இந்த, அகம் புறம் என்ற எதிரும் புதிருமான இரு கருத்தாக்கங்கள் தமக்குள் எந்தத் தர்க்கத்தைக் கொண்டிருக்கின்றன?

அகம் எதனைக் கூறுகிறது? அல்லது இந்தக் கேள்வியைச் சற்று மாற்றிப் போடலாமா? 'அகம்' இதன் அர்த்தம் என்ன?

அதுபோலப் புறத்திற்கு என்ன அர்த்தம்? இங்கு 'அகம்' என்ற வார்த்தை சுட்டும் 'உள்ளடக்கத்திற்கு' என்ன அர்த்தம், புறம்' என்ற வார்த்தை சுட்டும் உள்ளடக்கத்திற்கு' என்ன அர்த்தம் என்று கேட்கிறேன்.

அதாவது அகம் என்ற ஒலிச்சேர்க்கையாலான குறியீடு எந்த உள்ளடக்கத்தைச் சுட்டுகிறது (குறியீடு உள்ளடக்கத்தைத்தான் சுட்ட முடியும்) 'புறம்' என்ற ஒலிச் சேர்க்கையாலான 'குறியீடு'[7] எந்த உள்ளடக்கத்தைச் 'சுட்டுகிறது'? அதாவது 'பச்சை விளக்கு', புகைவண்டி ஓட்டுநருக்கு எதைச் சுட்டுகிறது? என்பது போன்ற கேள்வி இது. எனவே ஒலிச்சேர்க்கையாலான குறியீடு ஒரு பச்சைவிளக்கைப் போல உள்ளடக்கம் என்பது ஓட்டுநர் மனதிற்கு அவ்விளக்கு தரும் அர்த்தம்.

இப்போது வாசிப்பது என்ன என்று சொல்லி விளக்குவதற்குப் பதிலாக நான் அகமும் புறமும் இருவித ஒலிச்சேர்க்கைகள். அதாவது இரண்டும் 'எழுத்துக்கள்' (மொழியாலான அடையாளங்கள்) என்று காட்டினேன். மொழியடையாளமான 'எழுத்து' (வாயால் எழுப்பப்படுவது எழுத்து என்கிறார் தொல்காப்பியர்) வாசிப்பது இனி, சுலபம் தானே!

## ஆகுபெயரின் தத்துவம் என்ன?

ஆகுபெயர் பற்றி நிறையக் குழப்பங்கள் இருக்கின்றன. எது ஆகுபெயர். எது அன்மொழித் தொகை என்றெல்லாம் இலக்கணக் காரர்களிடையே நிறைய வாக்குவாதங்கள் நடந்துள்ளன. இன்றும் நடக்கின்றன. ஊர் சிரித்தது என்றால் ஆகுபெயர். பொற்கொடி வந்தாள் என்றால் பொன்னாலான கொடியைப் போன்ற பெண் வந்தாள் என்று பொருள் தந்து அன்மொழித் தொகை என்றெல்லாம் சொல்வார்கள். ஒரு உரையாசிரியர் ஆகுபெயருக்குச் சொல்லும் உதாரணத்தை இன்னொரு உரையாசிரியர் அன்மொழித் தொகைக்குக் கூறுகிறார். மொத்தத்தில் நாம் குழப்பமான ஆகுபெயர் பற்றிக் கவலைப்படாது (அல்லது இன்னொரு சந்தர்ப்பத்தில் கவலைப்பட ஒதுக்கிவிட்டு) அதன் தத்துவம் பற்றிக் கவனிப்போம்.

பாட்டு இயல் (=பாட்டியல்) என்பதற்குப் பாட்டின் இலக்கணத்தைக் கூறும் இயல் என்று அர்த்தம். இதுபோல் 'பொறி மஞ்ஞை' என்பது பொறிகளை உடைய பீலியை உடைய மஞ்ஞை என்று கூறுவது வழக்கம். இவ்விரு சொற்களையும் ஆகுபெயர் என்று பொதுவாகக் கூறுவார்கள் யாரும். அப்படியென்றால்

'பாட்டியல் என்பது மொழியாலான (ஒலியாலான) அடையாளம், குறியீடு.

'பாட்டின் இலக்கணத்தைக் கூறும் நூல்' என்பது அந்தச் சப்தம் சுட்டிய உள்ளடக்கம்.

'பொறி மஞ்ஞை' என்பது சப்தக் குறியீடு.

'பொறிகளைக் கொண்ட பீலிகளை உடைய மஞ்ஞை' என்பது குறியீடு சுட்டிய உள்ளடக்கம்.

இப்போது சற்று நுட்பமான ஒரு விஷயம் வருவதைக் கவனிக்க வேண்டும். பாட்டியல் என்பது ஒலிரூபமான குறியீடு. 'பாட்டின் இலக்கணத்தைக் கூறும் நூல்' என்பது ஒலியாலான வாக்கிய ரூபமான புரிதல் அல்ல. அதற்கு மாறாக அர்த்த ரூபமான புரிதல். ஏனென்றால் இதே அர்த்தத்தை இந்த வார்த்தைகளை மாற்றியும் இந்த வார்த்தைகள் இல்லாமலும் கொண்டுவர முடியும்.

ஒலிரூபமான புரிதல் ஒலியின் குறிகளால் (Signs) வெளிப்படத் தக்கது.

அர்த்தரூபமான புரிதல் ஒலியின் குறிகளால் வெளிப்படுத்த முடியாதது.

ஒலிரூபத்தை லிபியின் வடிவத்தில் எதிர்காலத்திற்கும் பாதுகாத்து வைக்க முடியும். 'எழுத்து' என்ற சொல் முதலில் சப்தத்தைக் குறித்துப் பிறகு லிபி தோன்றிய பின் வரிவடித்தைக் குறித்ததாகத் தெரிகிறது. அர்த்தரூபம் என்பது முக்கியமாய் இருவர் நேரடியாய்த் தாம் உணர்ந்ததைப் பேச்சுமூலம் பரிமாறிக்கொள்ளப் பயன்படுத்தும் மொழி வடிவிலான மனச்செயல்.

இந்த இடத்தில் நச்சினார்க்கினியர் ஆகுபெயருக்குக் கூறும் இரண்டு உதாரணங்களைக் குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன். அவை 'அகம்' என்பதும் 'பொருளதிகாரம்' என்பதும்.

'அகம்' என்ற சொல் அகத்திற்குள் உள்ள இன்பத்தைக் கூறுவதற்குப் பயன்படுவதால் இது ஆகிவந்த பெயர்ச்சொல் அதாவது ஆகுபெயர் என்கிறார் நச்சினார்க்கினியர். அதேபோல் பொருளதிகாரம்[8] என்பதும் பொருளின் இலக்கணத்தைப்பற்றிச் சொல்வதால் (இங்குப் பொருள் பற்றிச் சொல்வது வேறு; பொருளின் இலக்கணம் பற்றிச் சொல்வது வேறு என்பது நச்சினர்க்கினியரின் கருத்து) இது ஆகுபெயர். இந்த நான்கு உதாரணச் சொற்களும் எந்த இலக்கண விவாதமும் தேவையில்லாத அளவு தெளிவாக உள்ளன. அதாவது இதனுள் அதிக இலக்கண

நுட்பங்களுக்குப் போகாமல் இப்படிப் பொதுமைப்படுத்தலாம். ஒரு சொல் அல்லது இரு சொற்கள் இன்னொரு அர்த்தத்திற்குப் பதிலாக (substitute) நிற்பது ஆகுபெயர். அதாவது ஆகி நிற்பதும் பெயர். பாட்டு என்ற சொல் பாட்டின் இலக்கணத்திற்கும் அகம் என்ற சொல் அகத்திலிருக்கும் இன்ப உணர்வுக்கும் பதிலியாக நிற்பதால் அவை ஆகுபெயர்கள்.

இதனை நாம் பார்த்து வரும் முறையில் இப்படி சொல்லலாம்.

'அகம்' என்பதும் 'பொருளதிகாரம்' என்பதும் இரண்டு ஒலியாலான குறியீடுகள்.

இங்கு உடனே ஒரு கேள்வி வரும். அப்படியானால் 'அகம்' மற்றும் 'பொருளதிகாரம்' என்ற இரு குறியீடுகளும் சுட்டும் 'உள்ளடக்கம்' எவை? இந்தக் கேள்விக்கான பதிலைத் தொடர்ந்து சிந்திக்க வேண்டும்.

'அகம்' மற்றும் 'பொருளதிகாரம்' என்பவை எதனைச் சுட்டுகின்றன?

'அகம்' மற்றும் 'பொருளதிகாரம்' என்ற இரு சொற்களும் எதனைச் சுட்டும் பதிலிகள் (substitutes) என்றொரு கேள்வி வந்தது.

நச்சினார்க்கினியரிடம் ஒரு விடை உள்ளது. அதனைப் பார்ப்போம். 'அகம்' என்பது நான்கு அர்த்தங்களான (பொருள்களை) அறம், பொருள், இன்பம், வீடு என்பதில் வரும் இன்பம் ஆகும். தொல்காப்பியர் தன் நூலின் முதல் பிரிவாகிய எழுத்ததிகாரத்தில் எழுத்தைப் பற்றியும் இரண்டாம் பிரிவாகிய சொல்லதிகாரத்தில் சொல்லைப் பற்றியும் கூறி அந்த எழுத்து, சொல் இவற்றைக் கருவியாகப் பயன்படுத்தும் அர்த்தம் பொருளதிகாரத்தில் சொல்லப்படுகிறது என்றும் மிகவும் தெளிவாக உரை எழுதும் நச்சினார்க்கினியர் பேசிவிடுகிறார். இன்பம் என்பது என்ன என்ற கேள்விக்கும் நல்ல ஒரு விடை இந்த அறிவாளியான நச்சினார்க்கினியரிடம் உண்டு. அவர் சொல்கிறார்

> ஒத்த நேசத்தினால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற போது ஏற்படும் பேரின்பத்தை இருவரும் விளக்கிச் சொல்ல முடியாது. அது எப்போதும் ஒரு மனதின் உணர்வாகவே இருக்கும் .... இந்த இன்பம் தான் அகம். இந்த இன்பத்தைப் போலவே காமத்தைச் சேராத துன்பமும்கூட அகம்தான்.

இதுதான் நச்சினார்க்கினியர் வேறு வார்த்தைகளில் சொல்லும் விஷயம். இங்கு 'அகம்' என்றால் இன்பமும் துன்பமும் ஆகிய உள்ளடக்கங்கள் என்பது நந்சினார்க்கினியரின் எண்ணம். எனவே 'அகம் என்பதற்கான பதிலி என்று விளங்குகிறது.

இதுபோலப் 'பொருளதிகாரம்' பற்றியும் பார்க்க வேண்டும். பொருளதிகாரம் புருஷ+அர்த்தங்களான (புருஷார்த்தங்களான) அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கையும் கூறும். அதுபோல இந்த அர்த்தங்களுக்கு உபஅர்த்தங்களைத் தரும் காலம், இடம், பின்னணி, விலங்கு, மரம் முதலியனவும் பேசப்படும் விஷயமும் பொருளதிகாரம் என்ற சொல் (ஒலிக்குறியீடு) சுட்டும் உள்ளடக்கங்கள் ஆகும்.

ஆக, பொருளதிகாரம் என்ற சொல் எதற்குப் பதிலியாக (Substitute) நிற்கிற சொல் என்று நமக்கு இப்போது விளங்கி விட்டது.

**சப்த குறியீட்டிற்கும் உள்ளடக்கத்திற்கும் உள்ள உறவு**

ஃபெர்டினன்ட் டி சசூர் என்ற பிரஞ்சு மொழியியல்வாதி, மொழி பல குறியீடுகளைக் கொண்ட ஒரு தொகுதி என்றும் குறியீட்டுக்கும் அது சுட்டும் அர்த்தத்திற்கும் மத்தியிலுள்ள தொடர்பு இடுகுறித் தன்மை கொண்டது என்றும் எளிதாக ஒரு முடிவுக்கு வருகிறார். இதுபோல் 'பொருளதிகாரம்' என்ற சொல்லுக்கும் நச்சினார்க்கினியர் அது சுட்டுவதாகக் காட்டும் அர்த்தத்திற்கும் எந்தத் தர்க்க ரீதியான தொடர்பும் இல்லை என்றும் அறிகிறோம். இது தான் விஞ்ஞானம்.

எனவே தான், அதாவது சொல்லுக்கும் அச்சொல்லின் அர்த்தத்திற்கும் மத்தியில் ஓர் இடைவெளி (Gap) இருப்பதால்தான், தொல்காப்பியத்தின் ஒரே சூத்திரத்திற்கு உரை சொல்வதில் நச்சினார்க்கினியருக்கும் இன்னொரு உரைகாரரான இளம்பூரணருக்கும் வித்தியாசம் வருகிறது. அகம் என்ற சொல்லுக்கு இளம்பூரணர் போகம் அனுபவித்து அதனால் வரும் பிரயோஜனத்தை அறிவது அகம் என்று பொருள் தருகிறார். வீட்டுக்குக் காரணமான இன்பம் என்ற நச்சினார்க்கினியரின் அர்த்தத்தில் 'போகம்' என்ற சொல் இளம்பூரணரால் அறியப்படவில்லை. உடல் சம்பந்தமான போகமே அவர் கருதுவது.

மேலும் நச்சினார்க்கினியர் இன்பத்தையும் துன்பத்தையும் சேர்த்து 'அகம்' என்கிறார். இளம்பூரணர் இந்தக் கருத்தை ஏற்பாரா என்பது சந்தேகமே. எனவே 'அகம்' என்ற குறியீடு சுட்டும்

உள்ளடக்கம் (signified) நச்சினார்க்கினியருக்கு ஒன்றாகவும், இளம்பூரணருக்கு இன்னொன்றாகவும் இருக்கிறது. 'பொருள் அதிகாரம்' என்ற குறியீட்டுக்கான உள்ளடக்கம் பற்றியும் இரு உரைகாரர்களும் வித்தியாசமாகத்தான் புரிந்திருக்கிறார்கள். இந்த வித்தியாசம் மீண்டும் மொழியியல் சொல்வதுபோல் குறியீட்டுக்கும் அது சுட்டும் உள்ளடக்கத்திற்கும் உள்ள உறவு இடுகுறித் தன்மையானதென்பதையே நிரூபணம் செய்கிறது.[9]

### வழக்கும் செய்யுளும்

நச்சினார்க்கினியர் அகத்திணைப் பாடல்களின் இலக்கணம் கூறும்போது அவற்றில் வரும் காலம், இடம், விலங்கு, மரம், உணர்ச்சி (அதாவது முதல், கரு, உரிப் பொருள்கள்) என்று பேசும் போது ஒரு சந்தேகத்தைக் கிளப்புகிறார். அதாவது அகம் பிரிவைச் சார்ந்த பாடல்களில் முதல், கரு, உரி வரவேண்டுமன்பது உலகநியதியா அல்லது செய்யுள் நியதியா என்பதே அந்தச் சந்தேகம். பின்பு தன் கருத்தையும் சொல்கிறார். முதல், கரு, உரி என்பதெல்லாம் உலக வழக்கில் ஒருவர் வாழ்வில் சேர்ந்துவராது. அப்படி சேர்ந்து வருவது செய்யுளில்தான். எனவே தொல்காப்பியர் செய்யுள் வழக்கம் சார்ந்தே இலக்கணம் கூறுகிறார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. இப்படி உலகவழக்கமா? செய்யுள் வழக்கமா (நாடக வழக்கம்) என்ற சந்தேகம் தனக்குத் தோன்றுவதற்குக்கூடத் தொல்காப்பியத்தின் முன்னுரையான பாயிரத்தில் வரும் 'நல்லுலகத்து வழக்கம் செய்யுளும் ஆயிரு. . . " என்ற அடிதான் காரணம் என்றும் கூறுகிறார்.

பின்பு அவ்வப்போது தொல்காப்பியத்திற்கு உரை சொல்கையில் இப்படி செய்யுள் வழக்கமா, உலக வழக்கமா என்று பார்க்கிற பார்வையைத் தனது முறையாகவும் நச்சினார்க்கினியர் கொள்கிறார். (இந்தச் சிந்தனாமுறை தொல்காப்பியத்திலும் உள்ளதென்பதை மறுப்பதற்கில்லை).[10]

உலக வழக்கு என்பதை நாம் உள்ளடக்கம் என்றும், அதனைக் கூறும் செய்யுள் வழக்கு (நாடக வழக்கு) என்பதைக் குறிப்பான் என்றும் கூறலாம் என்று கருதுகிறேன்.

ஆகுபெயர் பற்றிய சிந்தனாமுறையில் மொழிரூபமான சிந்தனையைக் குறியீடு என்றும் உலகியலான சிந்தனையை உள்ளடக்கம் என்றும் கூறியதை இங்கு நினைத்துக்கொண்டால் மொழிக் குறியீடு மற்றும் உள்ளடக்கம் பற்றிய ஒரு நினைவோட்டம் நச்சினார்க்கினியரிடம் இருப்பது தெரிகிறது. ஆகுபெயர் சிந்தனை எல்லாரிடமும் உள்ளதென்றாலும் இறையனார் களவியல்

உரையாசிரியர் உலகவழக்கத்தை ஏற்காது உலக வழக்கத்திற்குச் சம்பந்தமேயில்லாத வெறும் கற்பனையான பாடல்களே அகத்திணை என்று கூறியதும் இங்கு நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

அடுத்து ஒரு முக்கிய விஷயம் பேச்சுக்கும் எழுத்துக்கும் உள்ள வேறுபாடு பற்றிய சிந்தனை, உலக அறிஞர்களை, சாக்ரடீஸிலிருந்து ரூசோ மற்றும் ஹெகல் வரை பலரின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது. தமிழிலும் தொல்காப்பியம் 'நுவலும் காலை', 'கூறும் கலை' என்றெல்லாம் சொல்லும்போது பேச்சு வடிவில் அச் சூத்திரங்கள் இருந்தமை தெரிகிறது. ஆனால் பேச்சு வடிவத்திலிருந்து (உரைநடையும் பாட்டும்) எழுத்து வடிவத்திற்கு மாறும் ஒரு கட்டம் மிக முக்கியமானது. இதுபற்றிய ஒழுங்கான சரித்திரத்தகவல்கள் இல்லை எனலாம். உரைநடைத் தமிழ் வரலாற்றில் மிகப் பிற்காலம்வரை வளரவில்லை என்பதைப் பார்க்கும்போது எழுத்துமுறை தமிழர்களிடம் அதிகம் செல்வாக்கில் இருக்கவில்லை என்று தெரிகிறது. ஏனெனில் பாட்டு, எழுத்து செய்யும் காரியத்தை ஓரளவு செய்யும். அதாவது அடுத்த தலைமுறைக்குப் பாதுகாக்கலாம். உரைநடையில் அது முடியாது.

எழுத்தின் தோற்றத்தை மிகவும் அவநம்பிக்கையுடன் பார்க்கிறார் சாக்ரடீஸ். ருசோ, மனிதனின் ஆன்மா அழிய எழுத்தின் தோற்றம் காரணமாகிப் போகிறதென்று கூப்பாடு போட்டிருக்கிறார். ஹெகல் கூட எழுத்து முறையைத் திட்டினாலும் வேறுவழியில்லாததால் சித்திர எழுத்துமுறையைவிட ஒலியைச் சுட்டும் குறிகளாலான எழுத்துமுறை பரவாயில்லை என்கிறார்.

இவ்வாறு பேச்சிலிருந்து (பேச்சு ஒலி ஒழுங்கில்லா மொழி; பாட்டு ஒலி ஒழுங்குள்ள மொழி). எழுதப்படும் உரைநடை அல்லது எழுதப்படும் பாட்டுக்கு மனித வரலாறு வருவது மனிதகுலத் தொழில் நுட்பப் புரட்சியின் (Technology) முதல் கட்டம் எனலாம். பேச்சின் சூழல் ஒரு சந்தர்ப்பத்தை விளக்கும் ஆற்றல் கொண்டது. உதாரணமாக, ஒரு பெண் போகிறாள். அதனை ஓர் இளைஞன் பார்க்கிறான். தன் நண்பனிடம் அவளைச் சுட்டி, "பூங்கொடி" என்கிறான். நண்பனின் மனத்தில் அவ்வார்த்தையும் அந்தச் சந்தர்ப்பமும் அப்பெண்ணைப் பற்றி அவன் நினைத்த உணர்வுகளைப் புரிய வைக்கின்றன. இங்கு இரு இளைஞர்களும் அவர்கள் முன் நிற்கும் ஒரு பெண்ணும் வேண்டியிருக்கிறார்கள். அந்த இளைஞன் துக்கமான ஒரு சூழலில் இருக்கிறான் என்றால் இப்படி ஒரு சொல் வராது. இப்படி மொழி ஒரு சந்தர்ப்பத்தின் பகுதியாகி அர்த்தத்தைத் தருகிறது. இது பேச்சின் சூழல்.

இனி இந்த ஒரு சந்தர்ப்பம் லிபியாகையில் (எழுதப் படுகையில்) கவிதை என்றால் 'பூங்கொடி போனாள்' என்றும், உரையென்றால் பூவை உடைய கொடி போன்றவள் போனாள் என்றும் உருவம் மாறும். எனவே பேச்சின் மொழி ஒருவிதக் குறியீடென்றால், பாட்டின் மொழி இன்னொரு குறியீடாகிறது. அர்த்தம் என்பது மொழியின் பேச்சு வடிவ முழுச்சூழலை மீண்டும் வார்த்தைக்குக் கொண்டு வரும் பிரயத்தனமாகும். எனவே 'பூங்கொடி வந்தாள்' என்ற அன்மொழித் தொகையின் அர்த்தம் என்பது ஒருபெண். அவள் பூங்கொடி மாதிரியானவள். பூங்கொடி என்ற வார்த்தை பூக்களை உடைய கொடி என்பதன் சுருக்கம் முதலான மொழிவயப்பட்டதும், மொழிக்கு அப்பால் செல்வதுமான பேச்சின் முழுச்சூழலை மறுசிருஷ்டி செய்வதுமாகும். இலக்கணம், அணி போன்றவற்றின் தத்துவம் இது. எனவே இங்குப் பார்த்த அன்மொழித்தொகை, ஆகுபெயர் முதலியன குறியீடு என்றும், அவை சுட்டும் பேச்சுச்சூழல் 'உள்ளடக்கம்' என்றும் அறியப்படும். தொல்காப்பியர் வழி நச்சினார்க்கினியர் கூறும் செய்யுள் குறியீடாகவும், வழக்கு உள்ளடக்கமாகவும் செயல்படுகின்றன. அதுபோல் பேச்சில் இருந்த ஒரு சரளத் தன்மை (spontaneity), சூழலின் ஒரு பகுதியாய் மட்டும் நிற்கும் தன்மை, உடனடித் தன்மை, குறிப்பிட்ட மனிதர்கள் முன் சம்பவிக்கும் தன்மை, ஒரு நிகழ்த்து தன்மை போன்ற எல்லாம் இங்கு மாறுகின்றன. அதற்குப் பதிலாகச் செய்யுளாக மொழி ஓர் இசையின் ஒழுங்கைப்பெறும்போது ஓரளவு எழுத்தாக மாறுவது போலவே இருக்கிறது. தெரிதா பேச்சு எழுத்தாக மாறும்போது என்னென்ன சம்பவிக்கும் என்று அறிய ஓர் இயலை (Grammatology) உருவாக்க வேண்டும் என்கையில் பேச்சு செய்யுளாக மாறும்போது நடக்கும் அதேவகை மாற்றத்தைக் கவனிக்காமல் விட்டு விட்டார் என்றுபடுகிறது. எழுத்துபோலவே செய்யுளிலும் ஒரு சரளமற்ற தன்மை, கச்சித வடிவமுள்ள தன்மை, காலத்தைத் தாண்டிய தன்மை சூழலின் பகுதியாக இருந்தது மாறி, சூழலின் மொத்தமொழி வடிவக் குறியாக இறுகி, யாருக்குமான எந்திரத்தன்மை உருவாகி (mechanical), ஒருவித நிகழ்த்தாத் தன்மையுடன் உருவாகிவிடுகிறது. எழுத்தில் ஒருவித 'பார்வைக்கான' குறிகளைப் பயன்படுத்தினால், செய்யுளில் 'கேட்பதற்'கான குறிகள் பயன்படுத்தப்படுகின்றன. இன்னொரு முக்கிய அம்சம், பேச்சிலிருந்து வந்த செய்யுள் உரைநடையை ஏற்காது; எழுத்து, செய்யுளையும் உரைநடையையும் காலத்தைத் தாண்டிப் பாதுகாக்க முடியும். மொத்தத்தில் மொழிவடிவ குறியீட்டியல் வடிவங்களான அன்மொழி, ஆகுபெயர் போன்றன பேச்சு எழுத்தாக உருமாற்றம் பெற்றபோது ஏற்பட்டவை என்று, தெரிதா சொல்வது போல்

கூறாமல், பேச்சு செய்யுள் வடிவமாக மாறிய போது அவை வந்தவை என்கலாம்.

இப்பகுதியில் பார்த்த சில அம்சங்களைக் கீழ்வருமாறு சுருக்கித் தரலாம்.

| (பேச்சின்) வழக்கின் குறி (உள்ளடக்கம்) | செய்யுள் (நாடக வழக்கின்) குறி (குறியீடு) |
|---|---|
| 1. சரளமானது | 1. சரளமற்றது |
| 2. கச்சிதமற்ற வடிவம் | 2. கச்சிதமான வடிவம் |
| 3. சூழலின் ஒரு பகுதி, பேச்சு | 3. சூழலின் குறியியல் வடிவம் செய்யுள் |
| 4. உடனடித் தன்மை உண்டு | 4. உடனடித் தன்மை இல்லை |
| 5. மனிதவியலானது | 5. எந்திரவியலானது |
| 6. நிகழ்த்தும் தன்மை | 6. நிகழ்த்தாத தன்மை |

இவ்வாறு நச்சினர்க்கினியர் வெளிப்படுத்தி வரும் எல்லாச் சிந்தனையிலும் குறியீடு, உள்ளடக்கம் பற்றிய சிந்தனை இருப்பது கவனிப்பதற்குரியது. இதனாலேயே களவியல் உரையாசிரியர் சொன்னதுபோல் உலகசம்பந்தமற்ற பொய் (இல்லது) தான் அகத்திணை என்பதை நச்சினார்க்கினியர் மறுக்கிறார். ஏனெனில் அக்கருத்தை ஏற்பது குறியீடு, உள்ளடக்கம் என்ற சிந்தனையை மறுப்பதாகும்.

### அகமும் புறமும் இரு குறியீடுகள்

நச்சினார்க்கினியர் இந்தச் சிந்தனைகளை ஏதோ குருட்டாம் போக்கில் சொல்லிச் செல்லவில்லை. தொடர்ந்து ஒவ்வொரு விஷயத்திலும் இப்படியே குறியீடு, உள்ளடக்கம் என்ற நெறிக்குட்பட்ட விதமாகச் சிந்திக்கிறார். அதற்கொரு மிக முக்கியமான உதாரணம் அகம் புறம் பற்றிய இவரது இருமை - எதிர்வுச் சிந்தனை.

அகத்திணையின் ஏழு பிரிவுகளாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்பவை புறத்திணையின் ஏழு விரிவுகளான வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், காஞ்சி என்பவற்றோடு ஒரு இருமை-எதிர்வு நோக்கில் உறவு கொண்டிருக்கின்றன. இந்தக்

கருத்தை அகத்திணையியலுக்கு உரை எழுதிய சோமசுந்தர பாரதியார் ஏற்காவிடினும் நச்சினார்க்கினியர், இளம்பூரணர், மு. அருணாசலம் பிள்ளை போன்றோர் ஏற்கிறார்கள். எனவே நச்சினார்க்கினியர் சிந்தனை எளிதில் ஒதுக்கித் தள்ளக்கூடிய சிந்தனை அல்ல என்பது விளங்கும். நச்சினார்க்கினியர் என்றாலே தமிழ் மாணவர்கள் எங்கோ இருக்கிற வரியை வேறு எங்கோ இழுத்துக் கொண்டு போய்ச் சேர்த்துப் பொருள் எழுதுகிற (இந்த முறையை "மாட்டு" என்பர்) ஆசாமி என்று வெறுப்போடு பார்ப்பதுண்டு. அப்படிப்பட்ட ஒருவரின் அகம் புறம் சிந்தனைகூட அப்படிப்பட்ட மாட்டாக இருந்தாலும் யாரும் வெறுக்கவில்லை என்பது சுவாரஸ்யமானது. தொல்காப்பியத்தில் ஓரிடத்திலிருக்கும் அகத்திணையியலையும் இன்னோரிடத்தில் இருக்கும் புறத்திணையியலையும் "மாட்டு" உத்தி மூலம் பிணைத்தே அகம்புறம் சிந்தனையை உருவாக்கியுள்ளார் நச்சினார்க்கினியர்.

பல இடங்களில் நச்சினார்க்கினியர் இளம்பூரணர் உரையிலிருந்து மாறுபடுகிறார். அப்படி அகம் புறம் பற்றி நச்சினார்க்கினியர் கூறும் சிந்தனையைப் பற்றி அறிந்தால் அந்த இரு குறியீடுகளின் (அகம், புறம்) முழு உண்மையும் புரியவரும். அகம், புறம் திணைகள் பற்றிய நச்சினார்க்கினியரின் சிந்தனைகளைப் பட்டியலிட்டுப் பார்ப்பவர்களுக்கு அகமும் புறமும் ஒருவித இருமை எதிர்வுப் பண்பாய் அமைந்திருப்பது தெரியும். அகத்திற்கு ஏழு திணைகள் இருந்தால் அதற்கு எதிரான புறத்திற்கும் ஏழு திணைகள் வருகின்றன. அகத்திற்கு நான்கு திணைகளுக்கு நிலம் இருந்தால் புறத்திற்கும் அதே நான்கு திணைகளுக்கும் நிலம் உள்ளது.

அகத்திணையின் உரிப்பொருளுக்கும் அதற்கு மாறான புறத்திணையின் உரிப்பொருளுக்குமுள்ள ஒற்றுமையை நச்சினார்க்கினியர் விளக்குவதில் கவனமாக இருக்கிறார். பாலையாகிய அகத்திணைக்கு உரிப்பொருள் பிரிவு. பாலைக்கு எதிராக வரும் வாகையின் உரிப்பொருள் வெற்றி. இவை எப்படி பொருந்தும் என்று யாருக்காவது சந்தேகம் வந்தால் நச்சினார்க்கினியர் இப்படி கூறுகிறார்: காதலர் பிரிவு பற்றி விளக்கும்போது ஓதுவதற்கும் தூது செல்வதற்கும் காதலியை விட்டுப் பிரிவு நிகழும் என்ற தொல்காப்பியர் கருத்தைச் சுட்டி, அப்படியென்றால் ஓதுதல் அந்தணர் வேலையாயிற்றே எனச் சொல்லி, பிராமணர் செய்யும் ஓதுதல் தர்மத்தின் வெற்றி என்று காட்டி, வாகையில் நடப்பது வாளால் வரும் வெற்றி;பாலையில் வருவது தர்மத்தின் வெற்றி என எதிரும் புதிருமாய் வாகையையும்

பாலையையும் நிறுத்துவார் திறமைசாலியும் வடமொழி அறிவும் உள்ள நச்சினார்க்கினியர்.

இதுபோலவே அகத்தை வெறும் இன்பம் என்று விளக்காமல், இன்பமும் துன்பமும் அகத்திணைதான் என்று சொன்னது போலவே, புறத்திணை பற்றிச் சொல்கையிலும் அறம், பொருள், வீடு என்ற பிற (இன்பம் தவிர்த்த) புருஷார்த்தங்களைப் புறத்திணை என்று சொல்கிறார். இப்படி அகம், புறத்தைக் குறியீடு என்று விளக்கினால் புதுப்பிராந்தியங்களைக் காணவும் முடியும்.[12] எனவே அகம் புறம் என்ற எதிர்முக சிந்தனாமுறை ஒரு சிந்தனை உத்தி (Strategy) தானே ஒழிய அவையே உண்மைகள் அல்ல. தமிழர்களின் இந்த அடிப்படை வாழ்வுப்போக்கை அறியாத தமிழ் மரபாளர்கள் அகம் புறம் என்ற வார்த்தைகளை ஒரு சடங்காக்கி, தமிழர்களின் சிருஷ்டி மிக்க நீண்ட இலக்கியச் சரித்திரத்தைச் செத்த சவமாக்கிப் பதவிகளுக்கும் மற்றும் வசதிகளைப் பெறவும் கருவியாக்கியது ஒரு துக்கக் கதையாகும்.

தமிழர்களின் மனதில் இன்றுகூட இந்த அகம்புறம் என்ற சிந்தனை நுழையும் அளவு அகம்புறம் சக்தி வாய்ந்தது என்பதைத் தமிழிலக்கிய வரலாற்றைப் படிப்பவர்கள் அறியமுடியும். அகம் மரபு, கோவை, தூது, கலம்பகம் என்று மொத்த தமிழிலக்கிய வரலாற்றின் பெரும்பகுதியை ஆக்கிரமித்துள்ளது. அதுபோல் புறம் என்ற பிரிவு, களவழி, பரணி, ஆற்றுப்படை, காவியங்களின் போர்ப்பகுதிகள் என்று ஒரு பெரிய மரபாகத் தமிழில் உண்டு. எனவே அகம்புறம் பற்றிய நிஜமான குணவிளக்கம் தமிழிலக்கிய வரலாற்றையும் தெளிவாய் அறிய உதவும். அதுபோல் தான் தமிழ்மன ஒருமைக்குத் தமிழிலக்கிய வரலாற்றை நம்பியிருக்கும் மக்களைப் பற்றியும் விளக்கும். இதுபோலவே அகமும் புறமும் இரு குறியீடுகளாய்ப் பார்க்கப்படுகையில் அவற்றிற்கும் நாம் மேலே பார்த்த எழுத்து வடிவத்தின் பொதுப்பண்புகளாகிய உடனடித் தன்மை இன்மை, எந்திரவியல் குணம், இறுகிய வடிவம் கொண்டவை போன்றன இருக்கத்தான் செய்யும். எனவே அகம் புறம் பற்றிய விளக்கம் இன்றைய தமிழ் மனத்தின் எந்திரவியல் தன்மை, இறுகல்தன்மை, உடனடிப் பண்பின்மை போன்றன வற்றையும் விளங்கிக் கொள்ள உதவும். இப்படி நான் சொல்வதைத் தமிழர்களின் இன்றைய பத்திரிகைகள், சொற்பொழிவுகள், தமிழ்த்துறை மனோபாவங்கள் இவற்றை ஆய்வு செய்து காண முடியும். ஆனால் இந்தப் பண்புகளைக் குறையானவை அல்லது நிறையானவை என்று மதிப்பிட்டுப் பார்க்கத் தேவையில்லை. தமிழ்ச் சமூகப் பண்பு பற்றிய ஒரு விளக்க ஆராய்ச்சிக்கான சரக்குகளாய் அவற்றைக் காணவேண்டும்.

### நச்சினார்க்கினியரின் பத்துப்பாட்டு உரை

அகம் புறம் பற்றிய விளக்கம் அடுத்ததாக நச்சினார்க் கினியரின் செய்முறை இலக்கிய விமர்சனத்தைப் புரியவும் உதவுகிறது. பழைய உரையாசிரியர்கள் நவீன இலக்கிய விமரிசனத்தைப் புரிந்தவர்களா இல்லையா என்றொரு விவாதம் பல காலமாக நடந்து வருகிறது.

தமிழ்ப் பற்றாளர்கள் தமிழில் ஏதாவது ஒன்று இல்லை என்று சொல்ல முடியுமா என்ற வருத்தத்தில் தமிழில் விமர்சனமும் உண்டு என்று கூறியிருக்கிறார்கள். யாரும் இன்றுவரை - தெ.பொ.மீயும் ஞானமூர்த்தியும், தமிழண்ணலும், ந. சஞ்சீவியும், மு. வரதராசனும், மு.வை. அரவிந்தனும் சரி - தமிழில் இலக்கிய விமரிசனத்தை உரையாசிரியர்கள் செய்தனர் என்று நிரூபிக்கவில்லை.

காரணம் இவர்கள் குறியியல் (Semiotics) விஞ்ஞானத்தைப் பயன்படுத்தவில்லை. குறியியல் உதவி இல்லாமல் உரையாசிரியர்களின் இலக்கிய விமர்சனத்தை அறிய வேறு கருவி இல்லை. இந்தத் தமிழ்ப் பற்றாளர்களைத் தவிர்த்துக் க.நா.சு.வும் அவரணியினரும், இவர்களைப் போலவே கைலாசபதியும், உரையாசிரியர்கள் இலக்கிய விமர்சகர்கள் அல்லர் என்று பல வேளைகளில் ஓரளவு திருப்தியாகவே பேசியுள்ளார்கள்; ஆனால் இலக்கிய விமரிசனம் ஓர் அறிவியலாய் உருவாகிவரும் இன்றைய வேளையில் பின்னவர்களின் இலக்கிய அறிவு மெச்சத் தகுந்த தென்றாலும் உரையாசிரியர்கள் இலக்கிய விமர்சகர்கள் அல்லர் என்ற இவர்களின் முடிவு ஏற்க முடியாததாக உள்ளது.

இந்தச் சிறு பின்னணிக் குறிப்புடன் நச்சினார்க்கினியர் பத்துப்பாட்டுக் கவிதைகளுக்கு உரை எழுதப் பயன்படுத்தும் அடிப்படைகளைக் காண வேண்டும்.

தொல்காப்பியத்தின் நச்சினார்க்கினியர் உரையில் வரும் அகம், புறம் சிந்தனையும் தொல்காப்பிய வழக்கு. செய்யுள் என்ற சிந்தனையும், ஆகுபெயர் போன்ற சிந்தனையின் அடியில் உள்ள தத்துவமும் நச்சினார்க்கினியரின் ஓர் அடிப்படைச் சித்தாந்தத்தை விளக்குகின்றன. அதாவது உண்மையை எப்படி அறிவது என்ற கேள்விக்கு இங்கு நச்சினார்க்கினியர் பதில் தருகிறார். நச்சினார்க்கினியர் தன் உரையில் நெடுகத் தொல்காப்பியரையும் பிற ஆசிரியர்களையும் உதாரணம் காட்டுகிறார். தான் சொல்லும் உரைக்கும், சிந்தனைக்கும் பிற ஆசிரியர்களின் சம்மதமும் உண்டு என்று எல்லா இடங்களிலும் காட்ட விரும்புகிறார். அது போல்

தொல்காப்பியரின் அகம், புறம் சிந்தனையும் தனது அகம், புறம் சிந்தனையும் ஒன்றுதான் என்றும், அல்லது தொல்காப்பியரில் வெளிப்படையாகச் சொல்லப்படாவிட்டாலும் தொல்காப்பியர் கூற விரும்பிய அர்த்தம் தான் சொல்வதுதான் என்பது போலவும் விவாதிக்கிறார். பின்னதற்கு ஓர் உதாரணமாகத் தொல்காப்பியரின் அகத்திணையியல் முதல் சூத்திரத்தின் உரையைப் பார்க்கலாம். அதன் விளக்கத்தில் இளம்பூரணர் சொல்லாத ஒன்றைக் கூறுகிறார். அகமும் புறமும் பற்றிப் பேசும் பொருளதிகாரம் உலகவழக்கு பற்றிய நூலாதலால் அகம்-இன்பமும், புறம்-அறம், பொருள் வீடுபேறு பற்றியும் பேசும் என்கிறார். இளம்பூரணருக்குப் பொருளதிகாரம் அந்த நூலின் உள்ளடக்கம் பற்றிய பட்டியல் மட்டுமே. மூன்றாவது உரையாசிரியரான ச. சோமசுந்தர பாரதியார் சொல்வதைப் பாருங்கள்: . . . ஆரியர் செய்யுள் அனைத்தும் அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றுள் ஒன்றும் பலவும் பொருளாகக் கொண்டே அமைதல் வேண்டும் என்பர்.... பொருளை அகமும் புறமுமென இரு கூறாய் வகுத்துக் கூறுவதே தமிழ் மரபாகும்.

இப்போது விஷயங்கள் தெளிவாகி விடுகின்றன. அகம் புறம் என்ற அடையாளச் சொல்லை (குறியீட்டை) வைத்து அதன் உள்ளடக்கத்தை ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டப்படி பார்க்கிறார்கள். நச்சினார்க்கினியர் வடமொழிக் கலாச்சார அர்த்தமும், சோமசுந்தர பாரதியும் இளம்பூரணரும் அகம், புறம் என்பது அகம், புறமே என்று தமிழ்மரபு அர்த்தமும் தருகிறார்கள்.

இதிலிருந்து நச்சினார்க்கினியர் அகம், புறம் என்ற இரண்டையும் ஒரு 'மாதிரி' (Model) என்று கருதுகிறார். அந்த 'மாதிரி' யைக் கருவியாகப் பயன்படுத்தி எந்தவித விளக்கமும் பாடலுக்குத் தருவது தப்பல்ல என நினைக்கிறார் நச்சினார்க்கினியர். ஆக, உண்மையை நேரடியாக அனுபவம் மூலம் அறிய முடியாது. மாதிரிகளைக் கட்டித்தான் அறியவேண்டும் என்ற எண்ணத்தை வந்தடைகிறார். மாதிரி என்பது ஒரு கட்டட வரைபடம் போன்றது. வரைபடமில்லாமல் கட்டடம் கட்டமுடியாது. என்றாலும் வரைபடம் வேறு; கட்டடம் வேறு. ஆனால் வரைபடம் போலக் கட்டடம் காட்சி தரும். அது போல் மாதிரி சட்டகம் வேறு, சிந்தனை வேறு; ஆனால் அகம்/புறம் பற்றித் தொல்காப்பியரில் தான் கண்ட கருத்துக்களை ஒரு 'மாதிரி'யாக வைத்து அதே அமைப்பில் கவிதைகள் வடிவம் கொண்டிருக்கின்றன என்கிற நினைப்பு நச்சினார்க்கினியருக்கு இருந்ததால்தானே கவிதை மொழியின் மீது தன் மாதிரியை வைத்து

அளந்து பார்க்கிறார். சிலவேளை மூல ஆசிரியனின் மொழியாலான பிரதியை உடைக்கவும் செய்கிறார்.

### நச்சினார்க்கினியரின் திருமுருகாற்றுப்படை உரை

நச்சினார்க்கினியர் அகம், புறம் என்ற இரண்டையும் புரியும் விதத்தையும், புரிகையில் அவரது அறிவு மேற்கொள்ளும் தந்திரோபாயத்தையும் (strategy) நாம் புரிந்தால் (எல்லாப் பொருள் கொள்ளலும் தந்திரோபாயம்தான்) அவரது திருமுருகாற்றுப்படை உரை புரியும். அவ்வுரை நவீன மேற்கத்தியர் கூறும் பல விமரிசன அறிவியல் கொள்கைகளுக்கும் நம் கலாச்சாரத்திற்கும் இருக்கும் தொடர்பைக் காட்டும்.

திருமுருகாற்றுப்படையின் முதல் சொல்லுக்கே தான் கண்டுபிடித்த "மாதிரி" மூலம் கிடைத்த அர்த்தத்தை எழுதுகிறார். "உலகம் உவப்ப. . ." என்ற வார்த்தைகளுக்கு 'ஜீவான்மாக்கள் சந்தோஷப்பட' என்று பொருள் தந்து, தனது பொருள் வேறுபட்டதுதான் என்பதையும் உணர்ந்து அதற்கு "உலகம் என்றாலும் இங்கு மண்ணில் வாழும் ஜீவான்மாக்களைக் குறிக்கும்" என்று அர்த்தம் தருகிறார். சோமசுந்தர பாரதியாரை அழைத்து அபிப்ராயம் கேட்டால் நச்சினார்க்கினியர் ஆசியரின் சிந்தனையை வலிந்து திருமுருகாற்றுப்படைக்கு ஏற்றுகிறார் என்று சந்தேகமில்லாமல் சொல்வார்.

இதுபோலப் பல உதாரணங்கள் நச்சினார்க்கினியர் உரையிலிருந்து தரமுடியும்.

திருமுருகாற்றுப்படையின் 58ஆம் வரிக்கு நச்சினார்க்கினியர் கூறும்பொருள் பலவித முக்கியத்துவங்களைக் கொண்டிருக்கிறது. "அறு வேறு வகையின் அஞ்சுவர மண்டி..." என்ற வரிக்கு நச்சினார்க்கினியர் புராணக்கதையை அர்த்தமாகச் சொல்கிறார். சிவபெருமான் உமையை மணந்த நாளில் இந்திரன் தோன்றிக் கருப்பத்தை வாங்கி ரிஷிகளுக்குக் கொடுத்ததையும் அதனைத் தொடர்ந்து ஆறு தேவ கன்னியருக்குப் பதுமப்பாயலிலே சூல் வளர்ந்ததையும் பின் இந்திரன் வந்து வச்சிராயுதத்தால் தாக்க, அந்த ஆறு வடிவங்களும் ஒன்றாய் இணைந்து அவனை எதிர்த்துச் சூரபன்மாவைக் கொல்ல ஆறு வடிவங்களும் வென்றதும் புராணம் கூறும். இவ்வரிக்கு இன்னொரு அர்த்தம் உண்டு. அது 'அவன் உடல் அற்று வேறு வேறாகும் வகையாய்ப் போர் செய்து' என்பதாகும். இந்த இன்னொரு அர்த்தத்தையும் நச்சினார்க்கினியர் தருகிறார்.

இங்கு முக்கியமாக நாம் கவனிக்க வேண்டியது உரை செய்வது என்பது ஒரு கலாச்சாரத்தை இன்னொரு

கலாச்சாரத்தோடு இணைக்கும் கலாச்சார மயமாதல் (Enculturation) என்ற மானுடவியல் செயல்பாடாய் உருவாவதைத் தான். பள்ளி மாணவர்களுக்கான வழித்துணை நூல் கருத்தாக்கமான "உரை" என்பதல்ல உரையாசிரியர்களின் செயல். இவ்விடத்தில் ஆரியர் கலாச்சாராம் தமிழ்க் கலாச்சாரம் இணைவு என்பதும் உரைமரபின் தோற்றமும் பிரித்தெண்ண முடியாது.

நச்சினார்க்கினியர் தன் உரைமூலம் இம்மாதிரியான வடமொழி மரபைத் தமிழ் இலக்கியத்தின் முக்கியமான ஓர் அர்த்த பரிமாணமாய்க் காட்டினாலும், தொல்காப்பியத்திலிருந்து பிற்காலத் தமிழ் நூல்கள் வரை நன்கு கற்றவராகையால் தமிழ் மரபிற்குள்ளேயே இருந்த அகம் புறம் "மாதிரி" (Model) சிந்தனாமுறை தந்த ஒரு தந்திரோபாய வசதியின் மூலம்தான் அதைச் செய்கிறார் என்பதுதான் இங்கு நான் சுட்ட விரும்புவது. எனவே ஆரியர் மரபு, தமிழ் மரபு என்றபேதத்தைப் பேதமற்றதாக்கி அதாவது ஒரு கலாச்சார அர்த்தத்தை இன்னொரு கலாச்சாரத்தின் முன் ஒரு மாதிரி (Model) ஆக்குவதன்மூலம் இணைத்து விடுகிறார் நச்சினார்க்கினியர். வடமொழி புராணம், அர்த்தம், தத்துவம் போன்றவற்றை நம் கலாச்சார மதிப்பீடுகளாய் உள்வாங்க, இரு வாசல்களாய் அகம் குறியீட்டையும் புறம் குறியீட்டையும் பயன்படுத்துகிறார். நம் சிந்தனையின் வளர்ச்சி என்பதே எல்லா மரபுகளின் ஒருங்கிணைவுக்குரிய பொருத்து சங்கிலி நம் மரபில் இருக்கிறதென்று கண்டுபிடிப்பதுதான். இதுதான் ஒரு கலாச்சாரத்தில் இருக்கும் சிருஷ்டிமையம். எனவே அகம் புறம் என்ற இரு குறியீடுகள் மூலம் வேறு ஒரு கலாச்சார அர்த்தம் என்ற உள்ளடக்கத்தை மொத்த தமிழ்க் கலாச்சாரம் என்ற மொழிக்குள் (Discourse) கொண்டு வந்தவர் நச்சினார்க்கினியர் எனலாம்.

திருமுருகாற்றுப்படை ஒரு மதம் சார்ந்த நூல். இது உண்மையில் சங்க காலத்தைச் சார்ந்ததுதானா என்ற கேள்விகூட கேட்கப்படுவது உண்டு. எனவே மதச் சிந்தனை தமிழ்க் கலாச்சாரத்திற்கு வடமொழி மரபு மூலம் வந்தது எனறு நினைத்துத் திருமுருகாற்றுப்படையில் நச்சினார்க்கினியர் அப்படி அர்த்தம் சொன்னது பற்றி இங்கு விவாதிக்க முடியாதென்கிறவர்கள் உண்டு. எனவே நெடுநல்வாடை என்ற தமிழின் ஓர் அதி அற்புதமான கவிதை பற்றிய நச்சினார்க்கினியரின் உரையைச் சர்ச்சைக்கு எடுப்போம்.

நெடுநல்வாடை, பலருக்கும் தெரிந்தது போல, கணவனைப் பிரிந்து படுக்கையில் வருத்தத்தோடு அலங்காரம் செய்யாமல் இருக்கும் ஒரு ராணியையும், போர்க்களத்தில் ஒரு பாசறையில்

அவளைப் பற்றிய நினைவே இன்றிப் புண்பட்ட தன் வீரர்களைப் பார்த்து ஆறுதல் சொல்லிக் கொண்டிருக்கும் ஒரு ராஜனையும் பற்றிய, நீண்ட கவிதை. மதம் சம்பந்தப்பட்ட சமாச்சாரங்களே இக் கவிதையில் இல்லை. அசலாக இது சங்கக் கவிதைகளின் மரபைச் சார்ந்த கவிதை.

நெடுநல்வாடை உரையில் நச்சினார்க்கினியர் ´முதலில் நெடுநல்வாடை என்ற தலைப்பை ஆராய்கிறார். இது எனக்கு ரோலான் பார்த்தேஷ் (Roland Barthes) என்ற பிரஞ்சு நாட்டு இலக்கிய விமரிசகர் பிரஞ்சு எழுத்தாளர் பால்சாக்கின் "சராஸின்" என்ற நாவல் தலைப்பை எடுத்து ஆராய்வதை நினைவூட்டுகிறது. ஏன் இதைக் கூறுகிறேன் என்றால் நச்சினார்க்கினியரும் பார்த்தேஷும் மொழி அடிப்படையில் உருவான "மாதிரிகளைப்" (Linguistic Models) பயன்படுத்துகிறார்கள் தத்தம் விமரிசனங்களுக்கு.

தலைப்பு ஆய்வில் நச்சினார்க்கினியர் நெடுநல் என்பதை நெடிதாகிய நல்லவாடை என விரித்துப் பண்புத்தொகை என்கிறார். வாடை என்பது 'வாடைக்காற்று வீசும் காலத்துக் கூதிர்காலப் பாசறைக்குப் பிறந்த வழி கூறல் என்கிற' ஆகு பெயர் என்கிறார். பேச்சிலிருந்து கவிதைக்கு ஒலி மாறியபோது நடந்த மாற்றங்களாக ஏற்கெனவே அன்மொழித் தொகையைப் பார்த்தோம்.

இங்குப் பேச்சிலிருந்து (பேச்சு கச்சிதமான வடிவம் பெறாத மொழியாகையால்) செய்யுளுக்குப் போகையில் பண்புத் தொகையில், பண்பை விளக்கும் மொழிக்குறிகள் மறைந்துவிடும். அதாவது ஒளித்துக் கொண்டுவிடும். உரையாசிரியன் ஒளித்துக் கொண்டு நிற்கும் அந்த மொழியையும் அது சுட்டும் அர்த்தப் பரப்பையும் பிடித்துவிடுவான். எனவே உரையாசிரியன் பேச்சின் 'பரிமாணத்தைத் தேடுபவன்; அதாவது இழந்து போன அர்த்தத்தையும் காலத்தையும் தேடும் வரலாற்றாசிரியன். இந்த வரலாற்றுப் பயணத்தை இவன் மொழிக் குறியீட்டைக் கைகாட்டியாய்ப் பயன்படுத்தி மேற்கொள்கிறான். அர்த்தத்திற்கும் குறிக்கும் உள்ள சம்பந்தத்தைத் தேடுகிறவனாய் உரையாசிரியன் இங்கு விளங்குகிறான்.

நெடுநல்வாடை, திருமுருகாற்றுப்படை போல் எந்தவிதக் காலாச்சார அர்த்தமோ ஏற்றிச் சொல்ல இயலாதது. எனவே உரைசொல்லும்போது இதனை நச்சினார்க்கினியர் எப்படி அணுகுகிறார் என்று பார்ப்பதும், அவரது உரைரீதியான அணுகல் நமக்கு இன்று ஒரு நவீனமான இலக்கிய விமரிசனத்தை உருவாக்கப் பயன்படுமா என்று ஆலோசிப்பது இந்த இடத்தில் என் குறிக்கோள்.

ரோலான் பார்த்தேஷைப் போல நெடுநல்வாடை என்ற கவிதையின் தலைப்பு ஒருவிதக் குறியீடு, உள்ளடக்கம் என்ற இருமுகப் பார்வை வழிக் கவிதைக்குள் போங்கள் என்று முதலில் வழிகாட்டுகிறது.

அந்தத் தலைப்பு நமக்கு உணர்த்தும் வழியை உணர்ந்து நெடுநல்வாடையில் என்ன குறியீடு மற்றும் உள்ளடக்கம் இருக்கிறதென்றும், இந்தக் குறியீடு, உள்ளடக்கம் மாதிரி என்ற தொலை நோக்கிக் கண்ணாடி வழி கவிதை மண்டலத்தைப் பார்த்தால் இது வரை தெரியாத எந்த இரகசியம் நமக்குத் தெரிகிறதென்றும் பார்க்கவேண்டும். இப்படி ஒரு தொலைநோக்குக் கண்ணாடிப் பார்வை நச்சினார்க்கினியரும் மரபு சார்ந்த இலக்கிய ஆசிரியர்களும் பார்த்துள்ளது நமக்கு உற்சாகத்தைத் தருகிறதென்ற தகவலையும் இந்த இடத்தில் சொல்லியே தீரவேண்டும். நச்சினார்க்கினியரும் வேறு சிலரும் நெடுநல்வாடை எந்தத் திணையைச் சார்ந்தது என்று ஒரு விவாதம் நடத்தியிருக்கிறார்கள்.

இந்த விஷயத்தில் நச்சினார்க்கினியர் சற்றுத் திணறியிருக்கிறார் என்கிறார் வெங்கட்ராம செட்டியார் என்பவர்.[13] நச்சினார்க்கினியர் தன் உரையில் முதலில் இந்தக் கவிதை பாலைத்திணை என்ற அகம் சார்ந்தது என்கிறார். பிறகு உரையின் இறுதியில் முல்லைத்திணை என்ற அகத்திணை சார்ந்ததென்கிறார். ஆக, திணை பார்த்தல் என்ற தொலைநோக்கிக் கண்ணாடிவழி பார்த்ததில் பாலைத்திணையா அல்லது முல்லைத் திணையா என்ற கச்சிதமான பதில் நச்சினார்க்கினியருக்குக் கிடைக்கவில்லை. விஷயம் என்ன என்றால், இக்கவிதை வரன் முறையான திணைப் பாகுபாடுகளைக் கடந்த ஒரு மாதிரியைச் சார்ந்த கவிதை. இதில் பாலை அம்சமும் உண்டு; முல்லையின் அம்சங்களும் உண்டு. "மாதிரி" பற்றி அறிபவர்களுக்கு மாதிரி வெறும் வறட்டுத்தனமான இறுகிய ஒன்றல்ல. நச்சினார்க்கினியரின் இத்தகைய மாதிரி அறிதல் முறையை இக்கட்டுரை நெடுகப் பார்த்து வந்துள்ள நாம் இந்த இருதிணை அம்சங்களும் உள்ளதால் நச்சினார்க்கினியர் நேர்மையாக, இரண்டு திணைகளையும் சார்ந்தது இந்தக் கவிதை என எழுதியுள்ளார் என்கலாம். ஏனெனில் நச்சினார்க்கினியர்க்குத் திணைப் பாகுபாடு ஒரு ஒற்றைப் (exclusive) பாகுபாடு அல்ல; அது ஒரு குறியியல் (Semiotic) பாகுபாடு.[14] எனவே மரபான திணையின் இரண்டு அம்சங்கள் இணைந்த 'பாலை முல்லை' என்ற குறியீடு மனதில் ஏறி ஏற்படுத்தும் அர்த்தப் பரப்பின் வீச்சே நெடுநல்வாடை எனலாம். பாலையை ஒரு குறியீடு என்று ஏற்றுக் கொண்டவர்களுக்குப் 'பாலை - முல்லை'யை அதுபோல் ஒரு

குறியீடாய் ஏற்று, இரண்டும் வெறும் குறியீடுகள் அதாவது கட்டிகள் என்று ஏற்றுக்கொள்ளச் சிரமம் இருக்கக்கூடாது. எனவே பாலையா, முல்லையா என்ற சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி இடமுடியும்.

நெடுநல்வாடையின் 168ம் வரிக்குப் பொருள் சொல்கையில் 'தோழி ஒருத்தி, ஓ கொற்றவையே! தலைவியின் பிரிவுத்துயர் தீராதா? அவனுக்கு வெற்றி கிட்டதா?' என்று வேண்டி முழுப்பாடலையும் தோழியின் பேச்சுப்போல் அமைத்ததாக நச்சினார்க்கினியர் எழுதுகிறார். இப்படி ஒரு கற்பனைத் தோழி வருவது சங்காலக் கவிதையில் உள்ள ஆச்சரியமான ஓர் உத்தி. கொற்றவை மீண்டும் நச்சினார்க்கினியரின் வழக்கமான தெய்வம் சார்ந்த விளக்கமே என்று தான் நாம் கருதவேண்டும். மூலத்தைப் படிப்பவர்கள் தோழி ஒருத்தியின் வெறும் வேண்டுகோள் என்றே பாடலைக் கொள்ள முடியும்.[15] அப்படியானால் நச்சினார்க்கினியர் தரும் பொருள் மூலம் இன்னொரு சாத்தியப்பாடு 168ஆம் வரிக்கு ஏற்படுகிறது. அதன் மூலம் 168ம் வரி ஒரு குறியீடாய் மாறி, நச்சினர்க்கினியரின் பொருளையும் அதே நேரத்தில் நம் பொருளையும் சுட்டமுடியும். குறீயீடு மொழித்தன்மையானது. அர்த்தங்கள் உலகியலானவை. அல்லது இப்படியும் சொல்லலாம். குறியீடு செய்யுள் வழக்கு (புனைவு); அர்த்தம் உலக வழக்கு. அதாவது எதார்த்தம், நடைமுறை.

இனி அடுத்த நிலைக்குப் போகவேண்டும். உலக வழக்கு என்பது உள்ளுணர்வு (intuition). அதாவது உளவியல் இதனை அனுபவத்தின் அடிப்படை என்கிறது. இந்த அடிப்படை விலங்கு-மனித அனுபவம் வெளிப்பட வேறு வழியின்றி வடிவங்களை நாடுகிறது. அந்த வடிவங்களும் மொழி வடிவங்களே. மொழி அதற்கான தர்க்கங்களைக் கொண்டது. எனவே உள்ளுணர்வுக்கும் மொழிக்கும் எப்போதும் ஒரு குறியீட்டியல் உறவே இருக்கிறது. மொழியென்ற தன்னின் வேறான குறியீடு இன்றி, தன் ஆசைகளை, வருத்தங்களை, உள்ளுணர்வை வெளியில் சொல்ல வகையில்லை. மனிதன் தன்னை உணர்வதும் இந்த மொழி நிலைதான். எனவே உள்ளுணர்வை உலக வழக்கு என்று தொல்காப்பியரின் மொழியில் சொன்னால் குறியீட்டைச் செய்யுள் வழக்கு என்று சொல்ல முடியும்.

நெடுநல்வாடையின் உள்ளடக்கத்தைப் படித்துப் பார்த்தால் முக்கியமான ஒரு காட்சியாகத் தலைவி தனியாகப் படுத்திருக்கும் கட்டிலின் மேற்பகுதியில் ஒரு சித்திரம் தீட்டப்பட்டிருக்கிறது. தன்னைப் பிரிந்த கணவனுக்காய் ஊன் உறக்கமின்றி, ஆபரணங்கள்

போடாமல் நல்ல ஆடை அணியாமல் இருக்கும் அந்த நங்கையின் கண்ணில் விழும் அந்தச் சித்திரத்தில் ரோகிணி நட்சத்திரம் தன் துணையுடன் சேர்ந்திருக்கும் காட்சி சித்திரிக்கப்படுகிறது. மிகப் பெரிய துயரில் பல நாட்களாய்த் தன்னை மறந்து இருக்கும் அப்பெண் அக்காட்சியைப் பார்த்து ஏதும் பேசவில்லை; அழவில்லை; அரற்றவில்லை. பதிலாக அவள் கன்னத்தில் ஒரு சொட்டுக் கண்ணீர் வடிகிறதாம். அதை அவள் தன் விரல் நகத்தால் சுண்டி விடுகிறாள். அவ்வளவுதான் கவிதையில் வருகிறது.

கணவனைப் பிரிந்த துன்பம் அவளை ஒரு தீவிர மனநிலைக்கு ஆட்படுத்தியிருக்கிறது என்பதுதான். யாருடனும் பேசாமல், காலை வருடும் தோழிகளையும் பொருட்படுத்தாது அவள் இருக்கும் நிலையிலிருந்து இது தெரிகிறது.

இங்கு உளவியல நிபுணர் ஃபிராய்ட் சொன்ன ஒரு உதாரணத்தைச் சொல்ல விரும்புகிறேன். ஒரு 18 மாதக் குழந்தை. அது தன் அரணாகக் கருதும் தாயை விட்டுக் கொஞ்ச நேரம் பிரிகிறது. உடனே தன் விளையாட்டுப பொருள்களை எடுக்கிறது. தன் படுக்கையில் தொங்கும் வலையில் பஞ்சடைத்த ஒரு விளையாட்டு ஸ்பிரிங்கை வீசி விளையாடுகிறது. இங்கு மறைதல், வெளியில் வருதல் என்பது பிரிந்த தாய்க்கான பதிலியாகிறது. எனவே தாயின் பிரிதலை இந்த விளையாட்டால் அது ஈடுசெய்கிறதென்கிறார் ஃபிராய்டு.

கணவனைப் பிரிந்து பெரும் துன்பத்தில் இருக்கிற தலைவி, வெங்கட்ராம செட்டியார் கூறுவது போல், கணவனை உயிர் என்று எண்ணுவதால் அவள் உயிரைப் பிரிந்திருப்பது போல் துக்கம் அனுபவிக்கிறாள். அதனால் ஒருவித மனநிலைப் பாதிப்புக்கு ஆளாகியிருக்கிறான். அவ்வாறிருக்கையில் தானும் ஒருசிறு குழந்தையின் மனநிலையைப் பெறுகிறாள்; தான் கணவனைப் பிரிந்த துக்கத்தை ரோகிணி தன் இணையுடன் சேர்ந்திருக்கும் பதிலிக் காட்சியோடு இணைத்துத் தன் துன்பத்தை ஒரு பதிலிமூலம் ஈடுசெய்கிறாள். பிறர் கருதுவது போல் அவளது துக்கம் ரோகிணியால் கூடுகிறதென்று கூற வழியில்லை. அவள் விடும் கண்ணீரும் பெருமூச்சும் உளவியல் ரீதியால் உள்மனதில் ஒத்தடமாகவே அமைகின்றன. எனவே ரோகிணிக் காட்சி குழந்தைக்கு விளையாட்டு போல் ஒரு குறியீட்டுக் காட்சியாய் மாறி அவளுக்கு ஆறுதல் தர உதவுகிறது.

இதுபோன்ற பதிலிகள் நெடுநல்வாடை முழுதிலும் வருகின்றன. ஆகுபெயரும் அன்மொழியும் பதிலிகள் (substitutes)

என்று ஏற்கெனவே பார்த்தோம். தோழியின் பேச்சாய் இந்த மொத்த கவிதையும் வடிவம் பெற்றுள்ளதால் அதன் மூலம் லிபியும் செய்யுளும் தோன்றுவதற்கு முந்திய பேச்சு வழக்குக்கால மனித உணர்வின் சரளத்தன்மை (Spontaneity) இக்கவிதையில் குறியீடாய்த் தலை நீட்டுகிறது எனலாம். அதனால் தான் இக்கவிதையைக் குறியீட்டு வடிவமாய்ப் பயன்படுத்தி ஒரு உள்ளடக்கம் கவிதையின் ஒரு பதிலியாய்ச் செயல்படுகிறது. எதற்குப் பதிலி என்றால் பேச்சு வழக்குக் கால ஓர் அர்த்த முழுமைக்கான பதிலி என்று கூறுவேன். இந்த அர்த்த முழுமைதான் உள்ளடக்கம். சற்று விளக்குவோம்.

நெடுநல்வாடை கோவலர்களைப் பற்றிக் கூறும்போது அவர்கள் தங்கள் நிலத்தைப் பிரிந்து வந்துள்ளார்கள் (வரி 5) என்கிறது. பெண் குரங்கு மட்டும் குளிரில் வாடுகிறதாம். ஆண் குரங்கு பற்றிக் கூறப்படவில்லை (வரி 9); கொக்கும் நாரையும் எடுக்கின்றன (16, 17); குடும்பப் பெண்கள் (கணவனுடன் இருப்பவர்) விளக்குக் கொளுத்துகிறார்கள் (38-39). ஆண் புறாவும் பெண் புறாவும் சேர்ந்திருக்கின்றன (45-46). கவரிமானும் அன்னமும் சேர்ந்து காட்சி தருகின்றன (90). தனிமையால் தவிக்கின்றன குதிரைகள் (93-94); புணரும் அன்னத்தின் தூவியால் ஆனது படுக்கை (132). இவ்வாறு இணைகள் பற்றிய குறிப்புக்கள் கவிதை முழுதும் இருப்பதாலும் தலைவியின் நிலைமையோடு ஓர் ஒப்பீடும் ஒரு வேறுபடுத்தலும் கவிதையின் உள் அமைப்பாய் உறைந்து கவிதை உருப்பெற்றிருக்கிறது.

இது தலைவியின் துக்கத்தைச் சமன்படுத்த உதவும். ஆக, ஒருவித மந்திரத்தன்மை வாய்ந்த குணப்படுத்தல் (magical cure) தோழியின் குரல் வழியாகக் கவிதையில் செயல்படுவதை அறிகிறோம். தொல்காப்பியர் அர்த்தத்திற்கும் சொல்லுக்கும் உள்ள உறவு பற்றிக் கூறும்போது மந்திரப் பொருள் என்பது சொல்லின் அர்த்த வியாப்திகளில் ஒன்று என்கிறார். எனவே கிராமத்தில் தெய்வம் உற்று ஆடுபவன் ஒருவன் அந்தச் சாதியினரின் அல்லது ஊரின் குறையைப் போக்கத் தான் ஒரு குறியீட்டுச் செயல் பாட்டைச் செய்வதுபோல் தோழியின் குரல் நெடுநல்வாடையில் உள்ளுறைந்த குறியீடாய் நின்று ஒரு மந்திரப் பண்பை உள்ளடக்கமாய்க் கொள்கிறது. எனவே தலைவியின் நிலையைச் சித்திரிப்பதுடன் தலைவியின் துக்கத்தைப் போக்கி, அவளது உயிரைக் காக்க (பழந்தமிழகத்தில் வேலன் வெறியாடி, தலைவியின் நோயைப் போக்குவது போல்) ஒரு வெறியாட்டு ஆடும் செயலைத் தோழியின் குரல் செய்கிறது. எனவே 168ம் வரியில் மட்டும் வெளிப்படும் கற்பனை தோழியின் குரல் ஒரு மாந்திரிக மருந்தின் குணத்தையும் கொண்டிருக்கிறதெனலாம்.

இதுதான் நெடுநல்வாடை என்ற பெயரில் வந்த 188 வரிகள் என்ற குறியீட்டின் உள்ளடக்கம்.[16]

நச்சினார்க்கினியரின் கொண்டு கூட்டுப் பொருள்கோள் முறை ("மாட்டு") என்ற உரை சொல்லும் உத்தி பற்றியும் மேலே பார்த்தோம். மூல ஆசிரியர்கள் வாக்கியத்தை எங்கோ தொடங்கி எங்கோ முடிப்பதுண்டு. எனவே நச்சினார்க்கினியரும் வரியையும் வார்த்தைகளையும் மாற்றுவதில் தப்பில்லை. மத்திய காலத்தில் தமிழில் ஒருவித மனித சாராம்ச முதன்மைச் சிந்தனை வந்ததால், மூல ஆசிரியன் உயர்வாய்க் கருதப்பட்டான். ஆனால் நச்சினார்க்கினியர் கொண்டு கூட்டு உத்திமூலம் மூல ஆசிரியனின் ஒரு மொழிகூட ஒரு குறியீடுதான் என்றும் அம்மொழி அவனது உள்ளுணர்வின் நேரடிப் பிரதிபலிப்பு இல்லை, ஓர் இடுகுறித் தன்மை கொண்ட வெளிப்பாடு என்றும் புரிந்துள்ளார். மொத்தத்தில் நச்சினார்க்கினியர் பிற கலாச்சாரம் மற்றும் தெய்வ அர்த்தங்களைத் தமிழ்ப் பிரதிகளின் இடைவெளிகளைப் பயன்படுத்தி வாசித்துள்ளார். அந்த வாசிப்பு, தமிழ்க் கலாச்சாரமாய் இறுகிவிட்டது. அது ஒரு வாசிப்பு மட்டுமே என்றும் நாம் புரிந்து கொண்டால் தமிழ்க்கலாச்சாரத்தின் பல தனித்தன்மை பற்றி அறிவோம். மேலும் நவீன விமர்சனப்பாங்கு ஒன்றை நச்சினார்க்கினியரைப் பயன்படுத்தி உருவாக்குவதும் கடினமல்ல என்றும் இங்கு விளங்குகிறது.

## குறிப்புக்கள்

1. அகம், புறம் பற்றி ஒரு சில குறிப்பிடத்தக்க கட்டுரைகள் வந்துள்ளன. கா. சிவத்தம்பி 'ஆராய்ச்சி' இதழில் ஐந்திணைகளின் வளர்ச்சி பற்றி எழுதிய கட்டுரையும், எஸ். கார்லோஸின் பெங்களூர் பல்கலைக் கழக வித்யா பாரதி இதழில் (1975) வந்த கட்டுரையும், சமீபத்தில் கா. செல்லப்பன் இக்கருத்தாக்கத்தை உலகப் பொதுவான விமர்சன நெறியாய்ப் பார்த்த கட்டுரையும் (மேலும் 1989 அக்). எம். முத்துக்குமாரசாமியின் 'சங்க இலக்கியத்தின் அறிவுத் தோற்றவியல்' (மேலும் 1989 அக்) என்ற கட்டுரையும் புதுவிளக்கங்களுக்கு முயலுகிற கட்டுரைகள்.
2. Carlos, S., Five Regional Divisions of Early Tamil land, Vidya Bharati, Vol. I No. I, Bangalore University, 1975.
3. இந்நூற்களின் பட்டியல் விரும்புபவர்கள் உ.வே.சா. உரையுள்ள பத்துப்பாட்டுப் பதிப்புப் பார்க்கவும்.

4. இருமை எதிர்வு என்பது Binary opposition 'கல்' என்ற சொல்லைப் 'பல்' என்ற அதே அளவு கொண்ட இன்னொரு சப்தத்தோடு ஒப்பீடு செய்கையில் கிடைக்கும் வித்தியாசம் மூலம் அர்த்தம் உருவாகிறது என்ற சித்தாந்தம் இது.

5. Claude Levi-Strauss என்ற மானுடவியல் அறிஞர் Elementary Structures of Kinship என்ற தன் நூலில் மனித உறவு முறைகள் வெறும் அடையாளங்களை அடிப்படையாய்க் கொண்டவை என்றார். எனவே அவர் மொழி என்ற அடையாளத்தின் விதிகளைப் பயன்படுத்தி ஆய்ந்தார்.

6. நச்சினார்க்கினியரின் அகத்திணையியல் முதல் சூத்திர உரை பார்க்க.

7. தமிழில் தடங்கலின்றிப் புரிய குறியீடு, உள்ளடக்கம் போன்ற சொற்களைப் பயன்படுத்துகிறேன். Semeotics-ல் பயன்படுத்தும் சரியான சொற்கள் அல்ல இவை.

8. பொருளினது இலக்கணம் உணர்த்தினமையின் இது பொருளதிகாரம் என்னும் பெயர்த்தாயிற்று. இது நாள் மீனின் பெயர் நாளிற்குப் பெயரானாற்போல்வதோர் ஆகுபெயர்.

9. குறியீட்டுக்கும் (Sign) அது சுட்டும் உள்ளடக்கத்திற்கும், அதாவது குறிப்பீட்டுக்கும் (Signified) உள்ள உறவு நாம் நம்புவது போல் ஒரு தர்க்க அடிப்படை கொண்டது அல்ல; நம் பழக்கம் சார்ந்த ஒன்று. பல தலைமுறைகளாக நாம் அர்த்தத்திற்கும் சொல்லுக்கும் தர்க்கத் தொடர்பு உள்ளது என்று நம்பி வந்துள்ளோம். எனவே இந்த நம்பிக்கையை நாம் கேள்விக்குட்படுத்தவில்லை. கேள்விக்கு முதன் முதலில் உட்படுத்தியவர் சசூர். ஆனால் சொல்லுக்கும் அர்த்தத்திற்கும் ஒரு தொடர்பு இருப்பதாக நாம் நம்பியதால் அந்த மனிதகுல நம்பிக்கை ஒரு முக்கியத்துவம் பெற்றுவிடுகிறது. எனவே சொல்லுக்கும் அர்த்தத்திற்கும் உள்ள தொடர்பைச் சற்று மாற்றி லெவி ஸ்ட்ராஸ் விளக்குகிறார். அவர் சொல்வது: ". . . . . . I will say that the linguistic sign is arbitary a priori, but classes to be arbitary aposteriori", Structural Anthropology, Penguin, 1972. இந்தக் குறிப்பை இடுகுறித் தன்மை பற்றிய ஒரு கேள்வி எழுகையில் பதிலாகத் தரமுடியும்.

10. தொல்காப்பியம் சூத்திரம் 217, 218ஐப் பார்த்தால் அவை வழக்கு, செய்யுள் பற்றிப் பேசும்.

12. அகம், புறம் என்ற குறியீட்டின் மூலம் ஆழமாய்ப் போக முடியும் என்று நிரூபிக்க ஒரு நீண்ட விளக்கக்குறிப்புத் தரலாம்.

அகம் புறம் என்ற குறியீடுகளுக்கு அர்த்த வடிவமாய் நிற்கும் பண்பும் சப்த வடிவமாய் நிற்கும் பண்பும் உண்டு. முதலாவதை (Signifier) என்றும் இரண்டாவதை (Signified) என்றும் மொழியியல்வாதிகள் கூறுகிறார்கள். இவ்விரண்டின் உறவு கூட இடுகுறித் தன்மையானதுதான். தொல்காப்பியர் முதலாவதைச் சொன்மை என்றும் இரண்டாவதைப் பொருண்மை என்றும் கூறுகிறார். எனவே 'அகத்தின்' சொன்மை என்பது அகம் என்ற சொல்லின் ஒலிரூபம் (அதனை நாம் அ-க-ம் என்று குறிப்போம். புறத்தின் ஒலிரூபம் பு-ற-ம்). ஏன் குறியீட்டின் சப்த வடிவம் அர்த்த வடிவம் என்று பேசும் தேவை ஏற்பட்டது என்பதை இங்குப் பார்க்க வேண்டும். பேச்சொலியில் சொல் அதன் சப்தலய இழுப்புக்குத்தக இயங்கவும், அர்த்தம் தரவும் தொடங்கி விடும். எனவே சொல்லின் சொன்மை பற்றி ஆராயத் தேவைவருகிறது. அதுபோல் பேச்சின் சந்தர்ப்ப சூழ்நிலை சார்ந்த அர்த்தமும் சிலவேளை தனது அர்த்த இறுகலால் ஒலியை இரண்டாம் பட்சப் படுத்துவது உண்டு. எனவேதான் பேசும் போது ஒலிக்குள்ள பங்கை நாம் மறந்து விடுகிறோம். இந்த ஒலி வடிவமும் அர்த்த வடிவமும் இணைந்து எழுத்து வடிவமாகையில் பெரும்மாற்றம் ஏற்படுகின்றது. ஒலிக்கும் அர்த்தத்திற்கும் ஒரே குறியீடு ஏற்படுகிறது.

இந்தச் சிந்தனை அகம், புறம் பற்றிய பிரச்சினைக்கு ஒளிதர முடியுமா என்று யோசிப்போம்.

பாலையை 'நடுவணைந்திணை' என்கிற தொல்காப்பியர், அதனைத் தவிர்த்து உலகத்தை நான்காய்ப் பாகுபாடு செய்கிறார். எனவே நிஜஉலகம் என்கையில் நான்காய்ப் பங்கு வைக்கும் தொல்காப்பியர் பாகுபாடு என்கையில் ஐந்திணை என்கிறார். பலையின் கரு, உரி போன்றன பற்றி விரிக்கையில் பிரச்சினைகள் வருகின்றன. குறிஞ்சிக்கு மலை இருப்பது போலப் பாலைக்கு என்றால் தொல்காப்பியர் திருதிருவென முழிக்க வேண்டியதுதான். காரணம் பாலைக்கு நிலம் இல்லை. 'நிலம்' இல்லாத பாலைக்கு நியாயப்படி பார்த்தால் 'முதலும்' (இடமும், பொழுதும், 'கருவும்' (விலங்கு, மரம் மலர் போன்றன) 'உரியும்' (உணர்வு) இருக்கக் கூடாது. ஆனால் பாலைக்கு நிலம் தான் இல்லையே ஒழிய முதல், கரு, உரி ஆகிய மூன்றும் உண்டு. எனவே நச்சினார்க்கினியர்

11) அகம் புறம்

| | முதல் | கரு | உரி | | முதல் | கரு | உரி |
|---|---|---|---|---|---|---|---|
| குறிஞ்சி | மலை<br>கூதிர்<br>யாமம் | மலைச்சூழல்<br>விலங்கு | புணர்தல்<br>(களவு) | வெட்சி | கங்குல்<br>இரவுப்<br>போர் | மலைப்பகுதி | திரையைக்<br>களவு<br>செய்தல் |
| முல்லை | காடு<br>கார்<br>மாலை | காட்டுச்<br>சூழல்<br>விலங்கு<br>முதலியன | இருத்தல் | வஞ்சி | காடு<br>கார் | காட்டில்<br>உள்ளன | எதிர்நின்று<br>தாக்குதல் |
| மருதம் | வயல்<br>வைகறை<br>விடியல் | வயல்<br>சார்ந்தவை | ஊடல் | உழிஞை | விடியல்<br>போர் | | கோட்டை<br>முற்றுகை<br>எதிர்ப்பு<br>உணர்வு |
| நெய்தல் | கடல்<br>பகல் | கடல்<br>சார்ந்த<br>சூழல் | இரங்கல் | தும்பை | | | வேந்தனைத்<br>தாக்க அதனால்<br>இரக்கம்<br>தோன்றுதல் |
| பாலை | வேனில்<br>காலம்<br>நிலமில்லை | | பிரிவு<br>காரியத்தில்<br>வெற்றி | வாகை | | அறம்<br>சார்ந்த<br>வெற்றி | வாளால்<br>வெற்றி |
| கைக்கிளை | நிலமில்லை | | பொருந்தாக்<br>காமம் | பாடாண் | | வீடுபெறுதல் | கொலையுணர்வு |
| பெருந்திணை | நிலமில்லை | | ஒருதலைக்<br>காமம் | காஞ்சி | | நிலம்<br>நிலைக்காது<br>என்று அறிவு<br>பெறுதல் | நிலையின்மை |

பாலைத்திணையை ஒரு சுழலும் சக்கரம் போலப் பிறதிணைகளின்வழிச் சுழற்றுகிறார். மற்ற நான்கு திணைகளிலும் பாலையின் இடம், காலம், விலங்கு, மரம், உணர்வு முதலியன ஏறிவரும் என்கிறார்.

இது எதார்த்தமாய்ப் பார்ப்பவர்களுக்குப் பெரும் குழப்பம்தான். இது மட்டுமின்றி இந்த ஐந்து திணையோடு முதலும் கருவும் இல்லாத கைக்கிளை, பெருந்திணையையும் பலர் சேர்க்கிறார்கள். நச்சினார்க்கினியரும் சேர்க்கிறார். இந்த இரண்டையும் புறம் என்கிறவர்களும் உண்டு. இது இரண்டாவது குழப்பம். அடுத்து அகமும் புறமும் எதிர்எதிர் வரும் என்று தொல்காப்பியர் சொல்வதால் நச்சினார்க்கினியர் 'களவு' என்ற வார்த்தை குறிஞ்சிக்குப் புறமான வெட்சியில் வருவதை வைத்து ஆநிரைத் திருட்டும் (களவும்) குறிஞ்சியானது சொல்லும் களவு ஒழுக்கமும் தொடர்புடைய தென்று சொல்லுமளவு அபத்தத்திற்குப் போகிறார். (அகமும் புறமும் ஒரே உண்மையின் இருபக்கங்கள் என்ற குறியீட்டுக் குணத்தைச் சுட்டக் கைக்கிளைக்குப் பாடாண் எதிர் என்றும், பெருந்திணைக்குக் காஞ்சி எதிர் என்றும் சொல்ல நச்சினார்க்கினியர் மிகவும் கஷ்டப்படுகிறார்.) இங்குச் சோமசுந்தர பாரதியார் புத்திசாலித்தனமாக நிறையச் சூத்திரங்கள் காணாமல் போயிருக்கலாம் என்று சொல்ல வேண்டியவராகிறார். பொருளதிகாரத்தில் நிறைய இடைச் செருகல்கள் என்கிறார்கள் சிலர். ஒரு தொல்காப்பியரல்ல, பலர் என்கிறார்கள். கமில் சுவலபிலும் தெ.பொ.மீயும் இதெல்லாம் பொருளதிகாரத்தில் திணையில் உள்ள குழப்பத்தையே காட்டுகின்றன என்கின்றனர்.

இந்த மாதிரி தீர்க்கமுடியாத பிரச்சினைகள் இருந்தாலும், குறியீட்டுக்குச் சப்த வடிவமும், அர்த்த வடிவமும் உண்டு என்பதை மறக்காமல் அகம், புறம் வார்த்தைகளின் சப்த வடிவம் அ-க-ம், பு-ற-ம் என்று சொன்னதை மீண்டும் ஞாபகத்திற்குத் தருவோம்.

| குறியீடு | உள்ளடக்கம் | |
|---|---|---|
| | **சப்த வடிவம்** | **அர்த்த வடிவம்** |
| அகம் | அ -க-ம் | இன்பம், துன்பம் போன்றன |
| புறம் | பு-ற-ம் | அறம், பொருள், வீடு போன்றன |

